# க.பொ.த (உயர் தரப்) பரீட்சை - 2019

## 25 - இலங்கை வரலாறு (புதிய பாடத்திட்டம்)

## புள்ளி வழங்கும் திட்டம்

| | | | | |
|---|---|---|---|---|
| • I பகுதி | - | 01 x 40 | = | 40 |
| II பகுதி | - | பகுதி A<br>1 ஆம் வினா | = | 12 |
| | | பகுதி B, C<br>ஒவ்வொரு பகுதியிலிருந்தும் ஒரு வினாவையேனும் தெரிவு செய்து மூன்று வினாக்கள் (16 × 3) | = | 48 |
| | II ஆம் பகுதிக்கு மொத்தப் புள்ளி | | = | 60 |

| இறுதிப்புள்ளி | = | 40 + 60 | = | 100 |
|---|---|---|---|---|

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
3. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, சிற்றொப்பத்தை இடவும்.
4. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ........................................................................... ✓ $\frac{4}{5}$
...........................................................................
...........................................................................

(ii) ........................................................................... ✓ $\frac{3}{5}$
...........................................................................
...........................................................................

(iii) ........................................................................... ✓ $\frac{3}{5}$
...........................................................................
...........................................................................

(03) (i) $\frac{4}{5}$ + (ii) $\frac{3}{5}$ + (iii) $\frac{3}{5}$ = $\boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள் (துளைத்தாள்)**

1. க.பொ.த.(உ. தர) மற்றும் தகவல் தொழிநுட்பப் பரீட்சைக்கான துளைத்தாள் திணைக்களத்தால் வழங்கப்படும். சரியாக துளையிடபட்டு அத்தாட்சிப்படுத்திய துளைத்தாள் தங்களுக்கு கிடைக்கப்பெறும். அத்தாட்சிப்படுத்திய துளைத்தாளைப் பயன்படுத்துவது பரீட்சகரின் கடமையாகும்.
2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை ○ அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.
2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 இலக்கங்களில் பதியவும். வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதுவும்.

## புள்ளிப்பட்டியல் தயாரித்தல்

இம்முறை சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது. இது தவிர ஒவ்வொரு வினாப் பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும். பத்திரம் I ற்கான பல்தேர்வு வினாப்பத்திரம் மட்டும் இருப்பின் புள்ளிகள் இலக்கத்திலும் எழுத்திலும் பதியப்பட வேண்டும். 51 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.

o o o

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ශ්‍රී ලංකා ඉතිහාසය I (I කොටස)
இலங்கை வரலாறு I (பகுதி I)
History of Sri Lanka I (Part I)

25 T I

26.08.2019 / 1300 – 1610

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**இலங்கை வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1978 வரை**

சுட்டெண் : ..................................

**அறிவுறுத்தல்கள் :**

* இப்பகுதி **40** வினாக்களைக் கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் தரப்பட்டுள்ள **ஐந்து** தெரிவுகளில் **ஒன்று** மட்டுமே சரியானது. அச்சரியான விடையைத் தெரிவுசெய்து தரப்பட்டுள்ள **அறிவுறுத்தல்களுக்கேற்ப உமது விடையைக் குறித்துக் காட்டுக.**
* பகுதி **I** இற்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.
* **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** விடைகளை எழுதி முடித்த பின்னர், பகுதி **I** இற்கான விடைத்தாள்களை பகுதி **II** இற்கான விடைத்தாள்களுடன் **இணைத்துக் கையளிக்குக.**

## பகுதி I

- **1** தொடக்கம் **10** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ ஒரு காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**1.** (1) உறுவெல (2) பல்லேமலல (3) பதிராஜவெல
(4) மினிஹாகல்கந்த (5) பெல்லன்பண்டிபலஸ்ஸ (.........)

**2.** (1) மகாதித்த (2) கோகண்ணதித்த (3) சுகரதித்த
(4) கச்சகதித்த (5) காலதித்த (.........)

**3.** (1) வம்சத்தப்பகாசினி (2) சமந்தபாஸாதிகா (3) மனோரதபூரணீ
(4) சம்மோகவினோதணீ (5) சுமங்கலவிலாசிணீ (.........)

**4.** (1) உபோசதகர (2) ஜன்தாகர (3) பிரதிமாகர
(4) போதிகர (5) சூதிகர (.........)

**5.** (1) சிலப்பதிகாரம் (2) ஆர்ப்பாக்கம் (3) மணிமேகலை
(4) பதிற்றுப்பத்து (5) பட்டினப்பாலை (.........)

**6.** (1) பரராஜசேகரம் (2) சங்கிலி மன்னன் (3) புவிராஜபண்டாரம்
(4) எதிர்மன்னசிங்கம் (5) மயில்வாகனம் (.........)

**7.** (1) அப்போன்ஸோ (2) அல்மெய்டா (3) றிச்சர்ட்
(4) சில்வா (5) பெர்னாண்டோ (.........)

**8.** (1) ஜேம்ஸ் கோடினர் (2) ஜோன் டூவி (3) ஹென்றி மார்ஷல்
(4) ஆர். எல். புறோஹியர் (5) தோமஸ் ஸ்கின்னர் (.........)

**9.** (1) சைமன் டி. சில்வா (2) வலிசிங்க ஹரிஸ்சந்திர (3) பியதாஸ சிரிசேன
(4) டபிள்யூ. ஏ சில்வா (5) மாட்டின் விக்கிரமசிங்க (.........)

**10.** (1) அண்ட்ரு கோல்டிகொற் (2) ஹென்றி மொங் மேசன் மூர் (3) சோல்பரி
(4) ஒலிவர் குணதிலக (5) வில்லியம் கோபல்லவ (.........)

- **11** தொடக்கம் **15** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிகள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை எதிரேயுள்ள அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**11.** (1) பாஹியன் லென - புளத்சிங்கள
(2) பட்டதொம்ப லென - குருவிட்ட
(3) டொரவக்க லென - அத்தனகல
(4) பெலி லென - கித்துள்கல
(5) அளவள லென - கம்பஹா (.........)

**12.** (1) அபயவாபி - திஸ்ஸ வாவி
(2) மணிகிரவாபி - மின்னேரியா வாவி
(3) கானவாபி - மஹகணதரா வாவி
(4) பட்டபாசானவாபி - நாச்சதூவ வாவி
(5) கங்காதட்டாவாபி - கந்தளாய் வாவி (.........)

**13.** (1) வீரசோழியம் - தமிழ் இலக்கண நூல்
(2) அத்தவனகல்ல விகார வம்சம் - கத்திகுச்சி விகாரையின் வம்சக் கதைகள்
(3) கந்தவுரு சிரித - தம்பதெனிய யுகத்தின் மன்னர்களின் நாளாந்த வாழ்க்கை பற்றிய குறிப்புகள்
(4) சரசோதிமாலை - சோதிடம் பற்றிய தமிழ் நூல்
(5) நிகாய சங்கிரக - சாசன வரலாறு பற்றிய ஒரு படைப்பு (.........)

**14.** (1) தர்மபால - டொம் ஜுவான்
(2) யமசிங்க பண்டார - டொம் பிலிப்
(3) நிக்கபிட்டிய பண்டார - டொம் மனுவல்
(4) குசுமாசன தேவி - டொனா கதரினா
(5) கோணப்பு பண்டார - ஆஸ்திரியாவின் டொம் ஜுவான் (.........)

**15.** (1) நட்சத்திரக் கோட்டை - மாத்தறை
(2) மக்டொவல் கோட்டை - மாத்தளை
(3) மக்டொனல்ட் கோட்டை - பதுளை
(4) பிரட்றிக் கோட்டை - காலி
(5) ஒஸ்ரன்பேர்க் கோட்டை - திருகோணமலை (.........)

- **16** தொடக்கம் **20** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகளின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோவொரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடரொழுங்கில் **தரப்படவில்லை. Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். சரியான அச்சேர்மானத்தின் **இலக்கத்தைத் தெரிவுசெய்து அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**16.**

| X | Y |
|---|---|
| (i) எல்லாளன் | A கித்நுவரகல் |
| (ii) வலகம்பா | B திகஜந்து |
| (iii) தாதுசேனன் | C சல |
| (iv) முதலாம் விஜயபாகு | D மிகர |
| (v) முதலாம் பராக்கிரமபாகு | E கபிசீச |

(1) AECDB (2) BEDCA (3) CEBAD (4) DAECB (5) EBDAC (.........)

**17.**

| X | Y |
|---|---|
| (i) சாரார்தசங்கிரக | A ஐந்தாம் காசியப்பன் |
| (ii) ஜானகீகரண | B இரண்டாம் பராக்கிரமபாகு |
| (iii) தம்பியா அடுவா ஹடபதய | C நான்காம் சேன |
| (iv) சியபஸ்லாகர | D குமாரதாதுசேன |
| (v) கவிசிலுமின | E புத்ததாச |

(1) BACED (2) DAEBC (3) ECABD (4) EDCAB (5) EDACB (.........)

**18.** X | Y

(i) உயர்நீதிமன்றம் தாபிக்கப்படல் — A ஹேர்க்குலிஸ் றொபின்சன்
(ii) கொழும்பு - கண்டி வீதி கட்டுமானம் — B ஹென்றி மக்கலம்
(iii) மாநகர சபைகள் தாபிக்கப்படல் — C வில்லியம் மனிங்
(iv) விவசாயத் திணைக்களம் தாபிக்கப்படல் — D பிரட்றிக் நோர்த்
(v) பல்கலைக்கழகக் கல்லூரி தாபிக்கப்படல் — E எட்வேட் பாண்ஸ்

(1) BAECD (2) CEABD (3) CEADB (4) DEABC (5) ECDBA (………)

**19.** X | Y

(i) அலெக்சாந்தர் ஜோன்ஸ்ரன் — A கண்டிய பிரதேசங்களின் வதிவாளர்
(ii) ஜோன் டீ ஒயிலி — B குடியேற்ற நாட்டுச் செயலாளர்
(iii) ஜோர்ஜ் ரேணர் — C தொல்லியல் ஆணையாளர்
(iv) எமர்சன் ரெனண்ற் — D மத்திய மாகாணத்தின் முதலாவது அரசாங்க அதிபர்
(v) எச். சி. பி. பெல் — E பிரதம நீதியரசர்

(1) ADCEB (2) DEBAC (3) EADBC (4) EBACD (5) EDACB (………)

**20.** X | Y

(i) ஏ. எவ். மொலமுரே — A பிரதிநிதிகள் சபையின் முதலாவது தலைவர்
(ii) டி. பி. ஜெயதிலக — B நிறைவேற்றதிகாரம் கொண்ட முதலாவது ஜனாதிபதி
(iii) டி. எஸ். சேனநாயக்க — C முதலாவது எதிர்க்கட்சித் தலைவர்
(iv) என். எம். பெரேரா — D முதலாவது பிரதம மந்திரி
(v) ஜே. ஆர். ஜெயவர்த்தன — E முதலாவது சபாநாயகர்

(1) BEACD (2) CAEDB (3) CEABD (4) EADBC (5) EADCB (………)

- **21** தொடக்கம் **25** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று **உரிய தலைப்பிற்குப் பொருந்தாதுள்ளது.** அதனைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை எதிரேயுள்ள அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**21. வரலாற்றுக்கு முற்பட்ட காலம்**

(1) வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் பயன்படுத்திய தொழினுட்பம் அவன் பயன்படுத்திய கல்லாயுதங்களிலேயே பெரும்பாலும் தங்கியிருந்தது.
(2) வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் பிரதானமாக வேட்டையாடுதல் மூலமே தன் வாழ்க்கையை நடத்திக்கொண்டான்.
(3) வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் நெருப்பை எவ்வாறு உருவாக்குவது என்பதனை அறிந்திருந்தான்.
(4) வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் நிலையான விவசாய வாழ்க்கையை மேற்கொண்டான்.
(5) வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதன் அனேகமான சந்தர்ப்பங்களில் இறந்தவர்களின் சடலங்களை குகைக்குள்ளேயே அடக்கம் செய்தான். (………)

**22. சிகிரியா**

(1) முதலாம் காசியப்பனின் நிர்வாக மத்திய நிலையமாக சிகிரியா காணப்பட்டது.
(2) முதலாம் காசியப்பன் சிகிரியாவில் இரண்டாவது அளகாபுரியை அமைத்து (அலகமண்ட), அங்கே குபேரனைப் போல வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.
(3) காசியப்பனுக்குப் பின்னர் முதலாவது முகலன் சிறிதுகாலம் சிகிரியாவைத் தனது தலைநகராக்கிக் கொண்டான்.
(4) சிகிரியா ஓவியங்களில் உள்ள பெண் உருவங்கள் மின்னல்களையும் முகில்களையும் சித்திரிப்பதாக பேராசிரியர் பரணவிதான தர்க்கிக்கின்றார்.
(5) சிகிரியாவின் நீர் நந்தவனம் பண்டைய இலங்கையில் நந்தவனங்கள் அமைக்கும் துறையின் தனித்துவமான சாதனையாகும். (………)

**20.** **பின்வருவனவற்றுள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரித்தானியரால் உருவாக்கப்பட்ட மாகாணங்களை சரியான கால வரிசைக்கிரமத்தில் கொண்ட தெரிவு எது?**
(1) வடமேல், மத்திய, வடமத்திய, ஊவா, சப்பிரகமுவ
(2) மத்திய, வடமத்திய, வடமேல், சப்பிரகமுவ, ஊவா
(3) வடமத்திய, வடமேல், மத்திய, ஊவா, சப்பிரகமுவ
(4) மத்திய, வடமேல், வடமத்திய, ஊவா, சப்பிரகமுவ
(5) மத்திய, சப்பிரகமுவ, வடமத்திய, வடமேல், ஊவா (.........)

● **21** தொடக்கம் **25** வரையான ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று **உரிய தலைப்பிற்குப் பொருந்தாதுள்ளது.** அதனைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**21.** **அனுராதபுரக் காலத்தில் அரசின் வருமானம்**
(1) காணி வரியே பிரதான வருமான மூலமாக இருந்தது.
(2) அனுராதபுரக் காலத்தின் ஆரம்பத்தில் காணி வரி போஜகபதி என்ற பெயரால் குறிப்பிடப்பட்டது.
(3) நீர் வரி தகபதி எனப்பட்டது.
(4) துறைமுகங்களில் அறவிடப்பட்ட சுங்கவரி அரசின் இன்னுமொரு வருமான மூலமாக இருந்தது.
(5) விகாரைக் காணிகளுக்கும் அரச வரி அறவிடப்பட்டது. (.........)

**22.** **சிகிரியா**
(1) முதலாம் காசியப்பனின் நிர்வாக மத்திய நிலையமாக சிகிரியா காணப்பட்டது.
(2) முதலாம் காசியப்பன் சிகிரியாவில் இரண்டாவது அளகாபுரியை அமைத்து (அலகமண்ட), அங்கே குபேரனைப் போல வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.
(3) காசியப்பனுக்குப் பின்னர் முதலாவது முகலன் சிறிதுகாலம் சிகிரியாவைத் தனது தலைநகராக்கிக் கொண்டான்.
(4) சிகிரியா ஓவியங்களில் உள்ள பெண் உருவங்கள் மின்னல்களையும் முகில்களையும் சித்திரிப்பதாக பேராசிரியர் பரணவிதான தர்க்கிக்கின்றார்.
(5) சிகிரியாவின் நீர் நந்தவனம் பண்டைய இலங்கையில் நந்தவனங்கள் அமைக்கும் துறையின் தனித்துவமான சாதனையாகும். (.........)

**23.** **குருணாகல் காலப்பகுதி**
(1) இரண்டாம் புவனேகபாகு குருணாகலையைத் தனது தலைநகராக அமைத்துக்கொண்டான்.
(2) கி.பி. 1302 இல் நான்காம் பராக்கிரமபாகு அரச பதவியைப் பெற்றான்.
(3) குருணாகலையில் ஆட்சி புரிந்த மிக முக்கியமான ஆட்சியாளனாக நான்காம் பராக்கிரமபாகு விளங்குகின்றான்.
(4) குருநாகல் காலப்பகுதியில் 'பன்சிய பனஸ் ஜாதக பொத' எழுதப்பட்டது.
(5) எம்பக்க தேவாலயத்தில் உள்ள மரச்சிற்பங்கள் குருணாகல் காலப்பகுதிக்கு உரியவையாகும். (.........)

**24.** **பதினெட்டாம் நூற்றாண்டின் இரண்டாம் அரைப்பகுதியில் கண்டி இராச்சியத்தில் ஏற்பட்ட பௌத்த மறுமலர்ச்சி**
(1) கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனின் ஆதரவில் இந்த மறுமலர்ச்சி ஏற்பட்டது.
(2) பௌத்த சமயத்தின் உயர் மதச்சடங்குகள் (உபசம்பத) மீளமைக்கப்பட்டன.
(3) அமரபுர நிகாய தாபிக்கப்பட்டது.
(4) வலிவிற்ற சரணங்கர தேரருக்கு சங்கராஜ விருது வழங்கப்பட்டது.
(5) வருடாந்தம் தெய்வங்களுக்காக நடாத்தப்படும் அசல பெரகரா நிகழ்வுகளில் தலதா பெரகராவும் அறிமுகம் செய்யப்பட்டது. (.........)

**25.** **பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை**
(1) ஜோர்ஜ் பேட்டினால் சிங்கபிட்டியாவில் முதலாவது கோப்பிப் பயிர்ச்செய்கை ஆரம்பிக்கப்பட்டது.
(2) கோப்பிப் பயிர்ச்செய்கையின் வீழ்ச்சியின் பின்னர் சிங்கொனா பயிர்ச்செய்கை அறிமுகப்படுத்தப்பட்டது.
(3) உள்ளூர் செல்வந்தர்களால் தெங்குப் பயிர்ச்செய்கை பெருமளவில் மேற்கொள்ளப்பட்டது.
(4) லூல்கந்துரவில் ஜேம்ஸ் ரெயிலரினால் தேயிலைப் பயிர்செய்கை ஆரம்பிக்கப்பட்டது.
(5) இறப்பர், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதித் தசாப்தங்களில் நாட்டின் பாரிய ஏற்றுமதிப் பண்டமாகக் காணப்பட்டது. (.........)

**28. கண்டி இராசதானியின் வீழ்ச்சி தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?**

(A) மன்னனுக்கும் மகாதிகாரி மொல்லிகொடவுக்கும் இடையிலான பிணக்கு
(B) மன்னன் மக்களின் ஆதரவை இழந்தமை
(C) பிரித்தானியரின் சதியாலோசனைக் கொள்கை
(D) பிரித்தானியரால் மேற்கொள்ளப்பட்ட வீதி அமைப்புக்கள் (.........)

**29. பிரித்தானியர் ஆட்சியில் பண்டைய நீர்ப்பாசனத் திட்டங்களைப் புனரமைத்தல் தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?**

(A) பிரௌன்றிக், ஊறுபொக்க, கிரம ஆகிய நீர்ப்பாசனத் திட்டங்களைப் புனரமைப்புச் செய்தார்.
(B) வாட், வரண்ட வலயத்தில் பண்டைய குளங்களைப் புனரமைப்புச் செய்யும் ஒரு வேலைத்திட்டத்தை ஆரம்பித்தார்.
(C) கிரெகறி, கிராமக் குளங்களைப் புனரமைப்புச் செய்யும் வேலைதிட்டமொன்றை ஆரம்பித்தார்.
(D) கோர்டன், கலாவாவியைப் புனரமைத்தார். (.........)

**30. சுதந்திரத்தின் பின்னர் இலங்கையில் உருவான அரசாங்க முறைமை தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?**

(A) பாராளுமன்றமானது மகாதேசாதிபதி, பிரதிநிதிகள் சபை, செனெற் சபை ஆகியவற்றை உள்ளடக்கியிருந்தது.
(B) பிரதிநிதிகள் சபை 101 உறுப்பினர்களைக் கொண்டிருந்தது.
(C) மந்திரிசபை அமைச்சர்கள் அனைவரும் பிரதிநிதிகள் சபை அங்கத்தவர்களில் இருந்து தெரிவு செய்யப்பட்டனர்.
(D) 1972 இன் அரசியலமைப்புத் திட்டத்தின் மூலம் செனெற் சபை இல்லாதொழிக்கப்பட்டது. (.........)

- **31** தொடக்கம் **35** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**31. இலங்கையின் பௌத்த சாசன வரலாற்றில் எந்த மன்னனின் ஆட்சியில் கொள்கை அடிப்படையிலான முதலாவது மதப்பிரிவினை ஏற்பட்டது?**

(1) சத்தாதிஸ்ஸ (2) வாலகம்பா (3) வோகாரிகதிஸ்ஸ
(4) கோதாபய (5) மகாசேன (.........)

**32. துறைமுகத்தில் வசூலிக்கப்பட்ட சுங்கத்தீர்வைகள் தொடர்பான தகவல்களைத் தரும் கல்வெட்டு எது?**

(1) வேவல்கட்டிய (2) கோபிற்றிகமு (3) கொடவாய
(4) அம்பகமுவ (5) சங்கமு விகாரை (.........)

**33. அரசாங்க சபையில் முதல் பெண் அங்கத்தவர் யார்?**

(1) அட்லின் மொலமுறே (2) மேரி இரட்ணம் (3) டொறின் விக்கிரமசிங்க
(4) விவியன் குணவர்த்தனா (5) குசுமா குணவர்த்தனா (.........)

**34. இலங்கை தேசிய காங்கிரசின் முதல் தலைவர் யார்?**

(1) பொன்னம்பலம் இராமநாதன் (2) பொன்னம்பலம் அருணாசலம் (3) மார்க்கஸ் பெர்ணாண்டோ
(4) முத்துகுமாரசுவாமி (5) ஜீ. ஜீ. பொன்னம்பலம் (.........)

**35. இலங்கையில் நடைமுறைப்படுத்தப்பட்ட முதலாவது பல்நோக்கு அபிவிருத்தித் திட்டம் எது?**

(1) மின்னேரியா (2) மினிப்பே (3) கல்ஓயா
(4) கலாவாவி (5) பராக்கிரம சமுத்திரம் (.........)

- **36** தொடக்கம் **40** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும். **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருத்தமானதைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1** | சரியானது | பிழையானது |
| **2** | சரியானது | சரியானது |
| **3** | பிழையானது | பிழையானது |
| **4** | பிழையானது | சரியானது |
| **5** | சரியானது | சரியானதாக இருப்பதுடன் **முதலாவது** கூற்றை மேலும் விபரிக்கின்றது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | வோகாரிகதிஸ்ஸ மன்னன் உடற்காயங்களை தண்டனையாக வழங்குவதனை இல்லாதொழித்து கட்டளை பிறப்பித்தான். | வர்த்தகம், பண்டைய இலங்கையின் பொருளாதாரத்தில் பிரதான அம்சமாகக் காணப்பட்டது. | (.........) |
| **37.** | சுப எனும் பெயரைக்கொண்ட இராணுவப் பிரதானி ஜெயவர்தனபுர கோட்டே எனும் கோட்டையைக் கட்டினான். | சந்திரபானு எனும் சீனத்தளபதி இலங்கை மீது படையெடுத்து வீரஅளகேஸ்வர எனும் சிங்கள அரசனைச் சிறைப்பிடித்து கைதியாகச் சீனாவுக்குக் கொண்டு சென்றான். | (.........) |
| **38.** | போர்த்துகேயரால் மதமாற்றத்துக்கும் கல்விக்குமிடையில் ஏற்படுத்தப்பட்டிருந்த நெருங்கிய தொடர்பு ஒல்லாந்தரால் தொடர்ந்து முன்னெடுத்துச் செல்லப்பட்டது. | போர்த்துக்கேயரால் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலைகளை ஒல்லாந்தர் தாம் பொறுப்பேற்றுக் கொண்டதுடன், அவற்றுக்குப் புத்துயிருட்டி அவற்றின் எண்ணிக்கையை அதிகரித்து தேவாலயங்களோடு இணைத்துக்கொண்டனர். | (.........) |
| **39.** | வலான சித்தார்த்த தேரர் இரத்மலானையில் பரமதம்ம சேத்திய பிரிவெனாவை ஆரம்பித்தார். | ஹிக்கடுவ ஸ்ரீ சுமங்கல தேரர், இரத்மலானை ஸ்ரீ தர்மாலோக தேரர் ஆகியோர் முறையே வித்தியோதய, வித்தியாலங்கார பிரிவெனாக்களைத் தாபித்தனர். | (.........) |
| **40.** | டி. எஸ். சேனாநாயக்கவின் மரணத்தைத் தொடர்ந்து பிரதமராக ஜோன் கொத்தலாவல பதவியேற்றார். | 1956 தொடக்கம் 1965 வரையான காலப்பகுதியில் இலங்கை அரசாங்கங்கள் அணிசேரா நாடுகளின் வெளிநாட்டுக் கொள்கைகளுக்கு மிகச் சார்பாக நடந்துகொண்டன. | (.........) |

* *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம்

විෂය අංකය பாட இலக்கம் **25** විෂයය பாடம் **இலங்கை வரலாறு**

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 1 | 11. | 3 | 21. | 4 | 31. | 2 |
| 02. | 4 | 12. | 1 | 22. | 3 | 32. | 3 |
| 03. | 1 | 13. | 2 | 23. | 5 | 33. | 1 |
| 04. | 5 | 14. | 3 | 24. | 3 | 34. | 2 |
| 05. | 2 | 15. | 4 | 25. | 5 | 35. | 3 |
| 06. | 5 | 16. | 2 | 26. | 2 | 36. | 1 |
| 07. | 3 | 17. | 5 | 27. | 4 | 37. | 3 |
| 08. | 4 | 18. | 4 | 28. | 3 | 38. | 5 |
| 09. | 2 | 19. | 3 | 29. | 5 | 39. | 2 |
| 10. | 1 | 20. | 5 | 30. | 1 | 40. | 4 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 01 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 1 × 40 = 40

(නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus)

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ශ්‍රී ලංකා ඉතිහාසය I (II කොටස)
இலங்கை வரலாறு I (பகுதி II)
History of Sri Lanka I (Part II)

25 T I

## இலங்கை வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1978 வரை

**அறிவுறுத்தல்கள் :**

※ **முதலாம்** வினா கட்டாயமானது.

※ முதலாம் வினாவுக்கும் **B, C** ஆகிய ஒவ்வொரு பகுதியிலிருந்தும் ஒரு வினாவையேனும் தெரிவுசெய்து, மேலும் **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.

(**முதலாம்** வினாவுக்கு விடையளிப்பதற்கு **இலங்கையின் புறவுருவப்படம்** வழங்கப்பட்டுள்ளது.)

## பகுதி A

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப்படத்தில் கீழே தரப்பட்டுள்ள **எல்லா இடங்களையும் குறித்துப் பெயரிடுக.**

| | | |
|---|---|---|
| (i) மகாதித்த | (ii) கோகண்ண | (iii) பொம்பரிப்பு |
| (iv) அநுராதபுரம் | (v) களனி கங்கை | (vi) மகியங்கன |
| (vii) பராக்கிரம சமுத்திரம் | (viii) நல்லூர் | (ix) சீதவாக்கை |
| (x) காலி | (xi) மட்டக்களப்பு | (xii) ஊவா மாகாணம் |

(சரியாகக் குறித்துப் பெயரிடப்படும் ஒவ்வொன்றிற்கும் **01** புள்ளி வீதம் வழங்கப்படும்.)

## பகுதி B

**2.** இலங்கையின் வரலாற்றை வடிவமைப்பதில் உள்ளூர் புவியியல் காரணிகள் செல்வாக்குச் செலுத்திய விதத்தைப் பின்வரும் தலைப்புகளில் ஆராய்க.

(i) மத்திய மலைநாடு

(ii) ஆறுகளும் ஆற்றுப் பள்ளத்தாக்குகளும்

(iii) துறைமுகங்கள் (16 புள்ளிகள்)

**3.** "இலங்கையில் பௌத்த மதம் தாபிக்கப்பட்டமையானது சமூக, கலாசாரப் பண்புகளில் மட்டுமல்லாது அங்கு ஏற்பட்ட அரசியல் அபிவிருத்தியிலும் பெரும் செல்வாக்கை ஏற்படுத்தியுள்ளது."

(i) இலங்கையில் பௌத்த மதம் அறிமுகப்படுத்தப்பட்டபோது ஆட்சியிலிருந்த மன்னனின் பெயர் யாது? (01 புள்ளிகள்)

(ii) இலங்கையில் பிக்கு - பிக்குணி முறைமையினை அறிமுகம் செய்த தேரர், தேரி ஆகியோரின் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) இலங்கையில் பௌத்த மதம் பரவுவதற்கு வழிவகுத்த காரணிகளைச் சுருக்கமாக விளக்குக. (03 புள்ளிகள்)

(iv) அநுராதபுர காலத்தின் இறுதிவரை பௌத்த மதம் இலங்கைச் சமூகம், கலாசாரம், அரசியல் ஆகியன தொடர்பில் பெரும் செல்வாக்கை ஏற்படுத்திய விதத்தைப் பகுப்பாய்க. (10 புள்ளிகள்)

**4.** "இலங்கை வரலாற்றில் முதலாம் விஜயபாகு மன்னன் பெருமை மிக்க ஆட்சியாளனாகக் கருதப்படுவதற்குக் காரணம் பல்வேறு தடைகளுக்கு மத்தியில் நாட்டை அந்நிய ஆட்சியிலிருந்து விடுவித்து ஒன்றுபடுத்தியமையே ஆகும்." ஆராய்க. (16 புள்ளிகள்)

**5.** பின்வருவனவற்றில் எவையேனும் **இரண்டிற்கு** அவற்றின் வரலாற்று முக்கியத்துவம் தொடர்பாகச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) அநுராதபுர காலப்பகுதியின் நீர்ப்பாசன முறைமை

(ii) இராசரட்டை நாகரிகத்தின் வீழ்ச்சிக்கு வழிவகுத்த காரணிகள்

(iii) யாழ்ப்பாண இராச்சியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

(iv) கோட்டை காலப்பகுதியில் கலாசார அபிவிருத்தி

(ஒவ்வொன்றுக்கும் 08 புள்ளிகள்)

## பகுதி C

**6.** "கண்டி ஆட்சியாளர்கள் கரையோர மாகாணங்களை ஆட்சிபுரிந்த போர்த்துக்கேயருக்கு எதிரான கொள்கையொன்றைப் பின்பற்றினர்."

(i) கண்டி இராச்சியத்தின் தாபக ஆட்சியாளராகக் கருதப்படுபவர் யார்? (01 புள்ளிகள்)

(ii) போர்த்துக்கேயரிடம் புகலிடம் பெற்ற கண்டி ஆட்சியாளரதும் அவர் புதல்வியினதும் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) போர்த்துக்கேயரை கண்டி இராச்சியத்தின் மீது படையெடுக்கத் தூண்டிய காரணங்களைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iv) போர்த்துக்கேயருக்கு எதிராக கண்டி ஆட்சியாளர்கள் பின்பற்றிய கொள்கையை நுணுக்கமாக ஆராய்க. (10 புள்ளிகள்)

**7.** கோல்புறூக் - கமெரன் குழுவினரால் முன்வைக்கப்பட்ட அரசியலமைப்பு, நிர்வாகம், நீதித்துறை தொடர்பான சீர்திருத்தங்களின் முக்கியத்துவத்தை ஆராய்க. (16 புள்ளிகள்)

**8.** பின்வரும் தலைப்புகளில் 1948 தொடக்கம் 1978 வரையான காலப்பகுதியில் இலங்கையில் ஏற்பட்ட பொருளாதார அபிவிருத்தி தொடர்பாகப் பரிசீலனை செய்க.

(i) நெற்பயிர்ச்செய்கையும் விவசாயக் குடியேற்றங்களும்

(ii) தேசிய மயமாக்கல் திட்டம்

(iii) கைத்தொழில்கள்

(16 புள்ளிகள்)

**9.** பின்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) கரையோர மாகாணங்களில் ஒல்லாந்தரின் நிர்வாக முறைமை

(ii) 1848 பிரித்தானியருக்கு எதிரான கிளர்ச்சி

(iii) பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் அரைப் பகுதியில் ஏற்பட்ட இந்து, இஸ்லாமிய கலாசார மறுமலரச்சி

(iv) டொனமூர் அரசியலமைப்பு

(ஒவ்வொன்றுக்கும் 08 புள்ளிகள்)

* * *

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

| | | |
|---|---|---|
| ශ්‍රී ලංකා ඉතිහාසය I<br>இலங்கை வரலாறு I<br>History of Sri Lanka I | 25 | T |

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. } 1

විභාග අංකය / சுட்டெண் / Index No. } ..............................



# இலங்கை வரலாறு
# ஆதி காலம் முதல் கி.பி.1978 வரை

**அறிவுறுத்தல்கள் :**

- முதலாம் வினா கட்டாயமானது.
- முதலாம் வினாவுக்கும் B பகுதி மற்றும் C பகுதிகளிலிருந்து குறைந்தது ஒரு வினாவையேனும் தெரிவு செய்து மேலும் மூன்று வினாக்களுக்கும் விடை எழுதுக.
- (முதலாம் வினாவுக்கு விடையளிப்பதற்கு இலங்கை புறவுருவப் படத்தைப் பயன்படுத்தவும்.)

## பகுதி A

**01) உங்களுக்குத் தரப்பட்டுள்ள இலங்கை புறவுருவப் படத்தில் கீழ் குறிப்பிடப்படும் சகல இடங்களையும் குறித்துப் பெயரிடுக.**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (i) | மகாதித்த | (ii) | கோகண்ண | (iii) | பொம்பரிப்பு |
| (iv) | அனுராதபுரம் | (v) | களனி கங்கை | (vi) | மகியங்கண |
| (vii) | பராக்கிரம சமுத்திரம் | (viii) | நல்லூர் | (ix) | சீதாவாக்கை |
| (x) | காலி | (xi) | மட்டக்களப்பு | (xii) | ஊவா மாகாணம் |

(சரியாகக் குறித்துப் பெயரிடப்படும் ஒவ்வொன்றுக்கும் 1 புள்ளி வீதம் வழங்கப்படும்.)

**(12 புள்ளிகள்)**

## பகுதி B

**02) இலங்கையின் வரலாற்றை வடிவமைப்பதில் உள்ளூர் புவியியல் காரணிகள் செல்வாக்குச் செலுத்திய விதத்தைப் பின்வரும் தலைப்புகளில் ஆராய்க.**

i. **மத்திய மலை நாடு**

ii. **ஆறுகளும் ஆற்றுப் பள்ளத்தாக்குகளும்**

iii. **துறைமுகங்கள்**

(i) **மத்திய மலைநாடு** **(16 புள்ளிகள்)**

- இலங்கை வரலாற்றைக் கட்டி எழுப்புவதில் தீவின் மத்தியில் அமைந்துள்ள இடர் நிறைந்த மலைத்தொடர்கள் முக்கிய பங்கு வகித்துள்ளன.

- இப்பகுதி மலை அரண் , நீர் அரண் , வன அரண் என்பவற்றால் பாதுகாக்கப்பட்டிருந்தன. வெளி நாட்டு ஆக்கிரமிப்பு மற்றும் உள்நாட்டுக் கிளர்ச்சிகளின் போது பாதுகாப்பு இடமாக இப்பகுதி விளங்கியது.

- ஆரம்ப காலம் முதல் வெளிநாட்டு ஆக்கிரமிப்புக்களின் போது அரசர்களின் பாதுகாப்பு இடமாக இது காணப்பட்டது.
  உதாரணமாக : வட்டகாமினி அபயன் , முதலாம் சேனன், முதலாம் விஜயபாகு போன்ற அரசர்கள்

- நாட்டின் சில பகுதிகளில் ஏற்பட்ட அரசியல் கிளர்ச்சிகளின் போது பலமிழந்த அரசர்கள் இப்பகுதிகளைப் பாதுகாப்பு இடமாக பயன்படுத்தினர்.
  உதாரணமாக : II ம் சங்கதிஸ்ஸ அரசனின் மகன் ஜெட்டதீசன், II ம் மகிந்த மன்னனை எதிர்த்த தப்புல பிரதானி, காவந்தீசனை எதிர்த்த துட்டகாமினி இளவரசன், IIம் சேனனால் குற்றவாளியாக்கப்பட்ட மகிந்த ஆதிபாத பிரதானி.

- இது காலப்போக்கில் தனியான அரசியல் பகுதியாகவும், இராசதானியாகவும் வளாச்சியடைந்தமை. (கம்பளை , கண்டி இராசதானிகள்)

- இப்பகுதியின் அமைவிடம் மற்றும் இயற்கை அரண்களின் காரணமாக வெளிநாட்டு ஆக்கிரமிப்பாளஉகளால் விஷேடமாக போர்த்துக்கேய, ஒல்லாந்தர்களால் ( 1803 ஆம் ஆண்டு ஆங்கிலேயர்களால்) இலங்கை முழுவதையும் கைப்பற்றிக் கொள்ள முடியாமல் போனது.

- 1817 / 18 மற்றும் 1848 ஏகாதிபத்தியத்துக்கெதிரான போராட்டங்களின் போது இப்பகுதி முக்கிய இடமாக திகழ்ந்தது.

- இலங்கையில் உள்ள நதிகளின் பிறப்பிடமாகவும் இப்பகுதி காணப்பட்டது.

- இந்நாட்டின் சமூக, பொருளாதார, கலாசார துறைகளில் பாரிய மாற்றத்தை ஏற்படுத்திய பெருந்தோட்ட பயிர்ச் செய்கை மேற்கொள்ளப்பட்ட பகுதியாக காணப்பட்டமை.

- கண்டியில் தலதா மாளிகை நிர்மாணிக்கப்பட்ட பின் இப்பகுதி சமய, கலாசார துறை வளர்ச்சியில் முக்கிய இடமாக மாறியது.

**(7 புள்ளிகள்)**

(ii) **ஆறுகளும் ஆற்றுப் பள்ளத்தாக்குகளும்**

- மத்தியமலை நாட்டிலிருந்து உற்பத்தியாகி தீவின் நான்கு திசைகளிலும் பரவிச் செல்கின்ற வருடம் முழுவதும் நீரை வழங்கக் கூடிய நதிகளும் நதிக் கரையோரங்களும் ஏராளம் காணப்படுகின்றமை – இது ஆரம்ப கால மக்கள் குடியிருப்பிற்கு பெரும் செல்வாக்குச் செலுத்தியது.
  (நதிகளை அண்டி நாட்டின் உட்பகுதிகளிலும் மக்கள் தொகை பரவியது.)
  உதாரணமாக : மல்வத்து ஓயா – அனுராதகம / தம்பபண்ணி ; கலா ஓயா – உருவெலகம / விஜிதகம ; கணதரா ஓயா – உபதிஸ்ஸகம ஹ கல்ஓயா – தீககம

- இராசதானிகளின் தலைநகரம் நதிகளை அண்டிக் காணப்பட்டமை. மல்வத்து ஓயா – அனுராதபுரம் ; மகாவலி கங்கை – பொலன்னறுவை

- பிரதான வாழ்வாதாரமாக விவசாயம் காணப்பட்டமையால் ஆரம்ப கால குடியிருப்புக்கள் நதிக்கரை ஓரங்களில் அமைக்கப்பட்டிருந்தமை. : வட பகுதியில் – கலா ஓயா , மல்வத்து ஓயா ; தென் பகுதியில் – வளவ கங்கை, கிரிந்தி ஓயா.

- நீர்ப்பாசனத்துறை வளர்ச்சிக்கு நதிகள் பங்களிப்பு செய்தமை : கலா ஓயா – கலா வாவி ; மகாவலி கங்கை – மினிப்பே அணை.

- தேச எல்லைகளை வேறுபடுத்த இவை பயன்படுத்தப் பட்டமை : ரஜரட்டை – கலா ஓயா மற்றும் மல்வத்து ஓயா ; உருகுணை ரட்டை – மகாவலி கங்கை மற்றும் களுகங்கை ; தொலஸ்தகஸ்ரட்டை – வளவ கங்கை மற்றும் பென்தர கங்கை ; அட்டதகஸ்ரட்டை – வளவ கங்கை, மகாவலி கங்கை.

- அனுராதபுரம் மற்றும் உருகுணை அரசர்களின் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கு நதிகள் பங்களிப்பு செய்தமை : காவன்தீசன் – மகாவலி கங்கை கரையோரங்களில் பாதுகாப்பு அரண்களை அமைத்தமை ; 1 ஆம் பராக்கிரமபாகு மன்னன் வில்கம்தொட்ட முதல் திருகோணமலை வரை உள்ள இறங்கு துறைகளில் அரண்களை அமைத்து பாதுகாத்தமை.

- போக்குவரத்து தொடஉபாடலிற்கு நதிகள் பயன்படுத்தப்பட்டமை. நதிகளை அண்டி பாதைகள் அமைக்கப்பட்டமை : மகாகாமம் முதல் – ரஜரட்டை வரை மகாவலி நதியை அண்டிய பாதை.

- நதிகளுக்கு அருகில் இறங்கு துறைகளிலும் வஉத்தக நிலையங்கள் நிறுவப்பட்டிருந்தமை: மகாதித்த , கோகன்னதித்த , கொடவாய

**(7 புள்ளிகள் )**

(iii)**துறைமுகங்கள்**

- தீவைச் சுற்றி பல துறைமுகங்கள் காணப்பட்டமை.
  **பண்டைய காலத்தில்** : ஜம்புகோளப்பட்டணம் , மகாதித்த , கோகர்ண, கொடவாய, ஊராந்தொட்ட, தேவ நகர் , லங்காபட்டுன.
  **நவீன காலத்தில் :** கொழும்பு , காலி , மட்டக்களப்பு , திருகோணமலை, நீர்கொழும்பு

- ஆதிக் குடியிருப்புகளின் வருகை துறைமுகங்களின் ஊடாக இடம்பெற்றமை.
  - மகாதித்த – விஜயனும் 700 தோழர்களும் , பண்டுவாசுதேவன் குழு
  - கோகர்ண – பத்தகச்சானா குழு மற்றும் அவளின் சகோதரர்கள்
  - ஜம்புகோளப்பட்டணம் – சங்கமித்தா தேரி குழு

- தென் இந்திய ஆக்கிரமிப்புகள் – மகாதித்த துறைமுகத்தினூடாக இடம்பெற்றமை : சோழ, மாகனின் ஆக்கிரமிப்பு.

- வர்த்தக நிலையங்கள் துறைமுகங்களை அண்டி காணப்பட்டமை :
  (ஊராந்தொட்ட , கொடவாய , மகாகாம)
  இந்தியா, பர்மா, சீனா, அரேபியா, எகிப்து, உரோம், கிரேக்கம் முதலிய நாடுகளுடன் வெளிநாட்டு வர்த்தகம் மேற்கொள்ளப்பட்டமை.

- முதலாம் முகலன், முதலாம் விஜயபாகு அரசர்கள் வெளிநாட்டு யுத்த உதவிகளைப் பெற்றுக் கொண்டமை.

- கொழும்பு, நீர்கொழும்பு, கற்பிட்டி ஆகிய துறைமுகங்களில் இடைக்காலப்பகுதியில் வர்த்தகம் வளர்ச்சியடைந்தமை.
- திருகோணமலைத் துறைமுகம் நவீன காலத்தில் ஐரோப்பியர் இலங்கை மீது கவனம் செலுத்துவதற்கு முக்கிய காரணியாக அமைந்தது.

**(16 புள்ளிகள் )**

03) **“இலங்கையில் பௌத்த மதம் தாபிக்கப்பட்டமையானது சமூக, கலாசார பண்புகளில் மட்டுமல்லாது அங்கு ஏற்பட்ட அரசியல் அபிவிருத்தியிலும் பெரும் செல்வாக்கை ஏற்படுத்தியுள்ளது.”**

(i) **இலங்கையில் பௌத்த மதம் அறிமுகப்படுத்தப்பட்ட போது ஆட்சியிலிருந்த மன்னனின் பெயர் யாது?**

திஸ்ஸ / தேவநம்பியதீஸன் **(1 புள்ளி)**

(ii) **இலங்கைக்கு பிக்கு, பிக்குணி முறைமையை அறிமுகம் செய்த தேரர், தேரி ஆகியோர்களின் பெயர்களைக் குறிப்பிடுக.**

மகிந்த தேரர் – சங்கமித்த தேரி **(2 புள்ளி)**

(iii) **இலங்கையில் பௌத்த மதம் பரவியமைக்கு வழிவகுத்த காரணிகளைச் சுருக்கமாக விளக்குக.**

- தெய்வ வழிபாடு , இறந்தவர்களை வழிபடுதல் , இயற்கை வழிபாடு, விருட்ச வழிபாடு போன்ற வழிபாடுகள் நிலவிய சமூகத்தில் நிலையான சமயம் ஒன்றின் தேவை ஏற்பட்டிருந்தமை.
- பௌத்த சமயம் பற்றிய தெளிவான விளக்கம் இலங்கையர்களிடம் காணப்பட்டமை.
- மூன்றாவது பௌத்த மாநாடு, அசோகனின் தர்மப் பிரச்சாரம் மற்றும் இந்நாட்டு மன்னன் தேவநம்பியதிஸ்ஸ – அசோகன் இருவருக்குமிடையில் நிலவிய நட்புறவு.
- மகிந்தர் வருகை , பிக்குகள் சங்கம் உருவானமை.
- அரசன் பௌத்த சமயத்தை ஏற்றுக் கொண்டமை அதன் பரவலுக்கு காரணமானது.
- மகாமேகவனத்தை அன்பளிப்பு செய்தல் அரச பிரபுக்கள் பௌத்த சமயத்தை ஏற்று ஆதரவளித்தமை.
- சங்கமித்த தேரியின் வருகையும் பிக்குணிகள் சங்கம் தோன்றியமையும்.

**(3 புள்ளிகள்)**

**(iv)அனுராதபுர காலத்தின் இறுதி வரை பௌத்த மதம் இலங்கையின் சமூகம், கலாசாரம் அரசியல் ஆகியன தொடர்பில் செல்வாக்கினை ஏற்படுத்திய விதத்தைப் பகுப்பாய்வு செய்க.**

**சமூகம்**

- பஞ்சசீலத்தை அடிப்படையாகக் கொண்ட விழுமியங்களை பேணுகின்ற சமூகம் உருவானமை.
- அஹிம்சாவாதம்
- சமயத்தை மையமாகக் கொண்ட ஐக்கியம் மற்றும் ஒருமித்த சிந்தனையை கொண்ட சமூக வகுப்பு.
- ஆரம்ப காலப்பகுதியில் பிக்கு, பிக்குணி, உபாசக, உபாசிகா என்ற புதிய சமூக வகுப்பு தோற்றம் பெற்றமை.
- பெண்களின் சமூக வாழ்க்கை சமயத்தை அடிப்படையாகக் கொண்டு மாற்றமடைந்தமை. (துறவியாகும் சுதந்திரம்)
- புதிய சடங்கு சம்பிரதாயங்கள் தோன்றியமை.

**கலாசாரம்**

- மகிந்த தேரர் உட்பட தர்மத் தூதுக் குழுவின் வருகை. இலங்கையில் பௌத்த சமயம் நிறுவப்பட்டமை.
- புனித தாதுப் பொருட்கள் கொண்டுவரப்பட்டமை. அவை அரச உரிமையின் சின்னமாக மதிக்கப்பட்டமை.
- புனித வெள்ளரசு மரக்கிளை கொண்டுவரப்பட்டமை.
- பிக்குணி சங்கம் நிறுவப்பட்டமை.
- மொழி மற்றும் கல்வித் துறையில் வளர்ச்சி ஏற்பட்டமை.
- கலை, இலக்கியம் , கட்டடக் கலை துறைகள் வளர்ச்சி அடைந்தமை.
- பல்வேறு விழாக்கள் அறிமுகமானமை.

**அரசியல்**

- தீசனின் இரண்டாவது பட்டாபிஷேகத்தின் பின்னர் இலங்கையின் அரசாட்சிக்கும் பௌத்த சமயத்துக்கும் இடையில் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டமை. (பிற்பட்ட கால அரசர்களும் தேவநம்பிய எனும் பட்டப்பெயரை சூடிக் கொண்டமை)
- அரசன் முதல் பிரதானிகள் வரை பௌத்த சமயத்தை தழுவிக் கொண்டமை. பௌத்த சமயம் அரச சமயமாக உயர்நிலை அடைந்தமை.

- பௌத்த சமயத்தையும் அரசாட்சியையும் வேறுபடுத்த முடியாதளவு பிணைக்கப்பட்டதுடன் புனித தந்த தாது கொண்டுவரப்பட்ட பின்னர் அப்பிணைப்பு மேலும் வலுப்பெற்றது.

- பிக்குகள் அரசர்களுடன் நெருங்கிய தொடர்பைக் கொண்டிருந்தமை. இதனால் சமயத்துக்கும் அரசாட்சிக்கும் இடையில் நெருங்கிய பிணைப்பு ஏற்பட்டமை.

**(8 புள்ளிகள்)**

**04) "இலங்கை வரலாற்றில் முதலாம் விஜயபாகு மன்னன் பெருமை மிக்க ஆட்சியாளனாகக் கருதப் படுவதற்கு பிரதான காரணம் அந்நிய ஆட்சியிலிருந்து நாட்டை விடுதலை செய்ததுடன் நாட்டை ஒன்று படுத்தியமையுமாகும்" ஆராய்க.**

- உள்நாட்டு சவால்கள்
  - உருகுணையின் அதிகாரத்தை நிலைப்படுத்த கேஷதாது காசியப்ப, லோகேஸ்வர போன்றவர்களை தோற்கடிக்க வேண்டி ஏற்பட்டமை. (பனாக்கடுவ செப்பேடு இதுபற்றி குறிப்பிடுகிறது.)
  - கேசதாது காசியப்பன் புத்தளயில் ஏற்படுத்திய கிளர்ச்சி.

- வெளி நாட்டு தாக்குதல்கள் / சவால்கள் , சோழப் பேரரசர்கள் இடைக்கிடையே தாக்குதல் தொடுத்தமை.

- நாட்டை ஐக்கியப்படுத்தும் பாரிய சவால் காணப்பட்டமை.

- முதலில் உருகுணையை வெற்றி கொண்டமை.

- பின்னர் சோழர்களுக்கு எதிராக திட்டமிட்ட அடிப்படையில் போர் நடவடிக்கைகளை முன்னெடுத்து சோழர்களை தோற்கடித்தமை.
  - வரி செலுத்த மறுத்து கிளர்ச்சியில் ஈடுபட்ட ரஜரட்டை பகுதி மக்களை கட்டுப்படுத்த வந்த சோழப்படை உருகுணையையும் ஆக்கிரமித்ததுடன், பலுட்ட கிரி போரில் அவர்களை அரசன் தோற்கடித்து பொலன்னறுவையை வெற்றி கொண்டமை.
  - வீர இராஜேந்திரன் தாக்குதலை எதிர் கொள்ள முடியாமல் வாக்கிரிகலைக்கு பின்வாங்கியமை.
  - மஹாநாககுல வில் இருந்து இராணுவத்தை பலப்படுத்தியமை.
  - வீர இராஜேந்திரனின் மரணத்தின் பின்னர் சோழப் பேரரசில் ஏற்பட்ட உட்பூசல்களை பயன்படுத்தி பொலநறுவையில் இருந்த சோழரின் இராணுவத்தை மூன்று பகுதிகளினூடாக தாக்கி தோற்கடித்தமை.

- கி.பி. 1070 இல் இவ்வாறு இலங்கையை ஒன்று படுத்தி பொலன்னறுவையை தலைநகராக தெரிவு செய்து பண்டைய சடங்கு முறைகளை மீண்டும் அமுல்படுத்தி ஆட்சியை முன்னெடுத்தமை.

- இவ்வாறு வெளிநாட்டு சவால்களை வெற்றிகொண்டு நாட்டை ஐக்கியப் படுத்தியமையால் பெருமை மிகு அரசனாக திகழ்ந்தான்.

- உள்நாட்டு நிருவாகக் கொள்கை :
  - கைவிடப்பட்டிருந்த நீர்பாசனத் துறையை மறுசீரமைத்தல். ( மகாதித்த, மஹஹேலி, சரேபேறு, கடுன்தார , வலாஹஸ்ஸ முதலிய குளங்கள்)
  - விவசாயப் பொருளாதாரத்தை மீண்டும் கட்டியெழுப்பியமை.
  - பௌத்த சமயத்தை எழுச்சியுறச் செய்தமை.
  - பர்மாவிலிருந்து பிக்குகளை வரவழைத்து உபசம்பதா நிகழ்வை நடாத்தியமை. திரிபிடக நூலை எடுத்து வந்தமை.
  - புனிதஸ்தலங்களை மறுசீரமைத்தமை – வெல்கம் விகாரை ஜம்புகோள விகாரை, தம்புள்ள விகாரை , கிரிகண்ட விகாரை
  - சிவனொளிபாத யாத்திரிகளுக்கு வசதிகள் செய்து கொடுத்தமை.
  - இந்து மத வழிபாட்டிற்கும் ஆதரவு வழங்கியமை.

- வெளிநாட்டு கொள்கையின் கீழ் பலதார திருமணங்களின் மூலம் அரச தொடர்பை பலப்படுத்தியமை:
  - அயோத்தியின் ஜகதிபால அரசனின் மகள் லீலாவதியை திருமணம் செய்தல்.
  - திரிலோக சுந்தரி என்ற கலிங்க தேச இளவரசியை திருமணம் செய்தல்.
  - சுந்தரி என்ற கலிங்க மங்கையை தனது மகன் விக்கிரமபாகுவிற்கு திருமணம் செய்து வைத்தமை.
  - தனது சகோதரி மித்தா இளவரசியை பாண்டிய இளவரசனுக்கு விவாகம் செய்து கொடுத்தமை.
  - லீலாவதி அரசியின் மகளான யசோதராவை வீரவர்மனுக்கு திருமணம் செய்து கொடுத்தமை.

**(14 புள்ளிகள்)**

**05) பின்வருவனவற்றில் எவையேனும் இரண்டிற்கு அவற்றின் வரலாற்று முக்கியத்துவம் தொடஉபாக சிறுகுறிப்பு எழுதுக.**

i. **அனுராதபுர காலப்பகுதியின் நீர்ப்பாசன முறைமை.**
ii. **இராசரட்டை நாகரிகத்தின் வீழ்ச்சிக்கு வழிவகுத்த காரணிகள்.**
iii. **யாழ்ப்பாண இராச்சியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்.**
iv. **கோட்டை காலப்பகுதியில் கலாசார அபிவிருத்தி.**

**( ஒவ்வொன்றுக்கும் 8 புள்ளிகள் வீதம் )**

(i) **அனுராதபுர காலப்பகுதியின் நீர்பாசன முறைமை.**

- முதலில் பயிர்ச்செய்கைக்கு தேவையான நீரினை கால்வாய்கள் மூலம் வருடத்தின் குறித்த காலப்பகுதியில் பெற்று வந்தனர்.
- சனத்தொகை அதிகரிப்பிற்கு ஏற்ப உணவு உற்பத்தியை பெருக்க வேண்டி ஏற்பட்டதால் கிராமக் குளங்கள் நிர்மாணிக்கப்பட்டன.
- வசப மன்னனின் பின்னர் அரச ஆதரவுடன் பாரிய குளங்களைக் கட்டும் பணி ஆரம்பமானது.
- பல்வேறு பகுதிகளுக்கும் ஓடிச் சென்ற ஆற்று நீரை ஒன்று சேர்த்து தேவையான பகுதிகளுக்கு எடுத்துச் செல்லும் வகையில் நதிகளை மறித்து அணை எழுப்பி நீர்பாசன கட்டமைப்பை ஏற்படுத்தியமை.
- செயற்கையான கால்வாய்கள் மூலம் நீர்பாசன கட்டமைப்பை தொடர்புபடுத்தியமை.
  (எலகர கால்வாய், யோத கால்வாய் எனும் ஜய கங்கை கால்வாய் )
- நதிகளை மறித்து அணை எழுப்புதல்.
  (எலஹர அணை , மினிப்பே அணை , மஹாகல்கடவல அணை)
- கி.மு 3 ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 6 ஆம் நூற்றாண்டு வரை நீர்பாசனக் கட்டமைப்பை மேற்கொண்ட அரசர்கள் சிறப்பிடம் பெறுகின்றனர்.
  - தேவநம்பிய தீசன் – திசா வாவி
  - வசபன் – மகாவிலச்சிய , நொச்சி பொத்தான , கிரிவடுன்ன
  - மகாசேனன் – மின்னேரி , ஹுருளு வாவி , கவுடுளு வாவி
  - முதலாம் உபதிஸ்ஸன் – தோப்பா வாவி
  - தாதுசேனன் – கலா வாவி , பலளு வாவி , மானாமது வாவி
  - இரண்டாம் முகலன் – நாச்சதூவ வாவி, பதவிய குளம்
  - இரண்டாம் அக்கபோ – மினிப்பே அணை
- குளம் மற்றும் கால்வாய்களில் காணப்பட்ட தொழிநுட்ப அம்சங்கள் , அவை நிஉமாணிக்கப்பட்ட முறை, நில அளவீடு , போன்றன. பிசோகொட்டுவ ( கலிங்கல் தொட்டி ), கலிங்கல், உள்வான், வெளிவான் கதவுகள், குளக்கட்டு, அலைதாங்கி, சுருங்கை.

- இவற்றின் வளர்ச்சிக்கு அரசர்கள் வழங்கிய ஆதரவு , இதன் நிர்வாக நடவடிக்கைகளுடன் தொடர்புடைய அதிகாரிகள் பற்றிய தகவல்கள். ( அடிதய உதர – நீர்பாசன கைத்தொழில் நிர்வாக அதிகாரி, பியோவதாரன்ணன் – நீர்பாசன பரிசோதகர்)

- ரஜரட்டை நாகரிகத்தின் வீழ்ச்சிக்கு நீர்பாசனத்துறை கைவிடப் பட்டமை ஒரு பிரதான காரணியாக கருதப்படுகின்றமை.

**(8 புள்ளிகள் )**

(ii) **இராசரட்டை நாகரிகத்தின் வீழ்ச்சிக்கு வழிவகுத்த காரணிகள்**

- பல நூற்றாண்டு காலமாக இருந்து வந்த இந் நாகரிகம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டளவில் வீழ்ச்சியடையத் தொடங்கியது.

- பலவீனமான அரசர்கள் ஆட்சிக்கு வந்தமை. (V ஆம் சேனன், V ஆம் மகிந்தன்)

- அரச வம்சங்களிடையே அதிகாரப் போட்டி தொடர்ந்தும் ஏற்பட்டமை. (மௌரிய , இலம்பகர்ண மோதல்)

- தென் இந்திய தாக்குதல்கள் (சோழ , பாண்டிய)

- கிளர்ச்சிக்காரர்கள் அரச திறைசேரியை கொள்ளையிட்டமை , பௌத்த புனித ஸ்தலங்களை அழித்தமை.

- தொடர்ச்சியான சண்டை, மோதல்களால் நீர்பாசனத்துறை கைவிடப்பட்டமை.

- வேளக்கார, அகம்படி கூலிப்படையினரின் சேவையைப் பெற்றுக் கொண்டமை மற்றும் அவர்களது செயற்பாடுகள்.

- சோழ பேரரசின் ஆதிக்கம் கி.பி 993 இல் I ஆம் இராஜராஜனின் படையெடுப்பு, கி.பி. 1017 இல் இராஜேந்திர சோழனின் படையெடுப்பு.

**(8 புள்ளிகள் )**

(iii)**யாழ்ப்பாண இராச்சியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்**

- யாழ்ப்பாண இராசதானி தொடர்பாக யாழ்ப்பாண வைபவ மாலை , செகராசசேகரமாலை, கைலாய மாலை , ராஜாவலிய , நிகாய சங்கிரகய, செலலிகினி சந்தேசய போன்ற மூலாதாரங்களில் குறிப்பிடப் பட்டுள்ளது.

- கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் ஜாவா நாட்டு சந்திரபானு யாழ்ப்பாணத்தின் அதிகாரத்தை ஏற்படுத்தினான்.

- இரண்டாம் பராக்கிரமபாகு மன்னன் பாண்டிய அரசனின் ஆதரவுடன் சந்திரபானுவை தோற்கடித்த பின் பாண்டிய மன்னன் தனது பிரதிநிதியாக சந்திரபானுவின் மகனை வட பகுதியின் நிருவாகியாக நியமித்தான்.

- கி.பி 1310 – 1311 காலப்பகுதியில் ஆரியச் சக்கரவர்த்திகள் வட பகுதி நிர்வாகத்தை கைப்பற்றிக் கொண்டமை.

- ஆரியச் சக்கரவர்த்திகள் பிராமண குலத்தை சார்ந்தவர்களாகவும் பாண்டிய இராசதானியின் தென் பகுதியான வெச்சருக்கை நாடு எனும் பிராந்திய அரச குடும்பத்தில் பிறந்தவர்களுமாவர்.

- 12 ஆரியச் சக்கரவர்த்தி அரசர்கள் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளன.
  1. சிங்கை ஆரியன் எனும் விஜய கூலங்கை முதலாவது அரசனாதல்.
  2. குலசேகர சிங்கை ஆரியன்
  3. விக்கிரம சிங்கை ஆரியன்
  4. வரோதய சிங்கை ஆரியன்
  5. மார்த்தாண்ட சிங்கை ஆரியன்
  6. குணபூசண சிங்கை ஆரியன்
  7. வரோதைய சிங்கை ஆரியன்
  8. ஜயவீர சிங்கை ஆரியன்
  9. குணவீர சிங்கை ஆரியன்
  10. கனகசூரிய சிங்கை ஆரியன்
  11. பரராச சேகரன்
  12. சங்கிலியன்

- கி.பி 1344 இல் இலங்கை வந்த இபன் பதூதா ஆரியச் சக்கரவர்த்திகளை இலங்கையின் சுல்தான்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்.

- III ஆம் விக்கிரமபாகு காலத்தில் ஆரியச் சக்கரவர்த்திகள் கம்பளை இராசதானியின் சில பகுதிகளை தாக்கி வரி அறவிட்டதால் அழகேஸ்வரனால் கோட்டை பகுதியில் பாதுகாப்பு அரண் ஒன்றை நிறுவப்பட்டு ஆரியச் சக்கரவர்த்திகளின் அதிகாரத்தை கட்டுப்படுத்தி அப்பகுதியை மீட்டெடுத்தான்.

- VI ஆம் பராக்கிரமபாகு அரசன் சப்புமால் குமாரனை அனுப்பி ஆரியச் சக்கரவர்த்திகளை தோற்கடித்து யாழ்ப்பாணத்தை கைப்பற்றினான்.

- 1619 ஆம் ஆண்டு போர்த்துக்கேயர் யாழ்ப்பாணத்தை ஆக்கிரமித்தனர்.

**(7 புள்ளிகள்)**

(III)**கோட்டைக் காலப் பகுதியின் கலாசார அபிவிருத்தி**

- இங்கு கல்வி , இலக்கியம் சிறந்து விளங்கியது.

**கல்வி**

- VI ஆம் பராக்கிரமபாகுவின் காலத்தில் நிலவிய அரசியல், பொருளாதார, மற்றும் சமய எழுச்சி என்பவற்றுடன் அரச ஆதரவும் கிடைக்கப்பெற்றதனால் கல்வித் துறை வளர்ச்சி கண்டது.

- வீதாகம ஸ்ரீ கணானந்த பிரிவெனா, தொட்டகமுவ விஜயபா, தெவுந்தர இறுகல் குலதிலக, காரகல பத்மாவதி, பெப்பிலியான சுனேத்ரா தேவி , மற்றும் எரபத்கொட தர்மராஜ போன்ற பிரிவெனாக்கள் இலக்கியத் துறைக்கு பங்களிப்புச் செய்தன.

- இக்கல்வி நிலையங்களில் இருந்த பிக்குகள் பாரிய இலக்கியப் பணிகளை மேற்கொண்டனர். (காரகல வனரத்ன , வீதாகம மைத்ரீய , தொட்டகமுவ ஶ்ரீ ராகுல , வெத்தேவ தேரர் போன்றோர்)

- இங்கு சிங்களம், பாளி, சமஸ்கிருதம், பிராகிருதம், மற்றும் தமிழ் போன்ற மொழிகளும் காவியம் , நாடகம், சோதிடம் போன்ற பல்வேறு விடயங்களும் போதிக்கப்பட்டன.

- பிக்குகள் மற்றும் சாதாரண மக்கள் இவ் இலக்கியப் பணியில் ஈடுபட்டனர். (புதுகுண காவியம், தூது காவியம், மகா காவியம், புகழ் மாலை, உபதேச நூல்கள்)

- வனவாசி, கிராமவாசி பிக்குகள் இருபகுதியினரும் இலக்கியப் பணியில் போட்டி போட்டு ஈடுபட்டு வந்தனர். வனவாசி மரபை காரகல பத்மாவதி பிரிவெனாவும், கிராமவாசி மரபை தொட்டகமுவ விஜயபா பிரிவெனாவும் பேணி வந்தன.

- இக்கால கல்வி நிலையங்கள் சர்வதேச புகழைப் பெற்றிருந்ததால் சம்ஸ்கிருத பண்டிதரான ஶ்ரீ ராமச்சந்திர பாரதி இங்கு விஜயம் செய்துள்ளார்.

**இலக்கியம்**

- பிக்கு மற்றும் பிக்குணி அல்லாதவர்களின் கல்வி அபிவிருத்தி அடைந்ததால் இலக்கியம் வளர்ச்சி பெற்றது.

- இக்கால அறிஞர்கள் (பிக்கு / பிக்கு அல்லாத) இலக்கியத் துறைக்கு அதிகம் பங்களிப்பு செய்தனர்.

- இவ்வறிஞர்கள் சிங்களம், பாளி, சமஸ்கிருதம் மற்றும் தமிழ் மொழிகளில் பல்வேறு நூல்களை உருவாக்கினர்.

- வீதாகம மைத்ரிய தேரர் – புதுகுணலங்காரய , லோவட சங்கராவ , ஹங்ச சந்தேசய

- தொட்டகமுவ ஶ்ரீ ராகுல தேரர் – காவிய சேகர, பஞ்சிகா பிரதீபய, செலலிகினி சந்தேசய, பரவி சந்தேசய

- வெத்தேவ தேரர் – குத்தில காவியம்

- ஶ்ரீ ராமச்சந்திர பாரதி – பக்தி சதகய

- 6 ஆம் பராக்கிரமபாகு மன்னன் – ருவன்மல

- தம்மதின்னாசார்ய விமல கீர்த்தி தேரர் – சத்தர்ம ரத்னாகரய

- இருகல் குலதிலக பிரிவெனாபதி – கோகில சந்தேசய

- 6 ஆம் பராக்கிரமபாகு பற்றியது – பெரகும்பா சிரித்த

- 6 ஆம் பராக்கிரமபாகு எழுதிய ருவன்மல எனும் நூலை கவிதையாக வடிவமைத்தமை.

**(7 புள்ளிகள்)**

## பகுதி C

06) **"கண்டி ஆட்சியாளர்கள் கரையோர மாகாணங்களை ஆட்சி புரிந்த போர்த்துக்கேயருக்கு எதிரான கொள்கையை பின்பற்றினர்"**

(i) **கண்டி இராச்சியத்தின் தாபக ஆட்சியாளராக கருதப்படுபவர் யார்?**

சேனாசம்மத விக்கிரமபாகு **(1 புள்ளி)**

(ii) **போர்த்துக்கேயரிடம் புகலிடம் பெற்ற கண்டி ஆட்சியாளரதும் அவர் புதல்வியினதும் பெயர்களைக் குறிப்பிடுக.**

கரலியத்த பண்டார , குசுமாசன தேவி **( 2 புள்ளிகள் )**

(iii) **போர்த்துக்கேயரை கண்டி இராச்சியத்தின் மீது படையெடுக்கத் தூண்டிய காரணங்களை சுருக்கமாக குறிப்பிடுக.**

- முழு இலங்கையிலும் தமது ஆதிக்கத்தை ஏற்படுத்த முயன்றமை.
- மலையக அரசர்கள் தமது எதிரிகளான ஒல்லாந்தருடன் தொடர்பை ஏற்படுத்தக் கூடும் என சந்தேகித்தமை
- மலையக அரசர்களுடன் இடம்பெற்ற சண்டைகள் - 1 ஆம் விமலதர்மசூரியன், செனரத், II ஆம் இராஜசிங்கன்
- பொருளாதார காரணிகள்
  - வர்த்தகப் பொருட்களைப் பெற்றுக்கொள்ளல் (பாக்கு, யானை, கறுவா)
  - முழு இலங்கையிலும் தமது வர்த்தக ஏகாதிபத்தியத்தை ஏற்படுத்திக் கொள்ளல்.
  - தஞ்சாவூர், மதுரை போன்ற பகுதிகளுடன் மலையக அரசர்கள் மேற்கொண்ட வர்த்தக தொடர்பை தடுத்தல்.
- மலையகப் பகுதிகளில் தமது சமயத்தை பரவச் செய்தல்.

**(3 புள்ளிகள் )**

(iv) **போர்த்துக்கேயருக்கு எதிராக கண்டி ஆட்சியாளர்கள் பின்பற்றிய இராணுவக் கொள்கையை நுணுக்கமாக ஆராய்க.**

- 1 ஆம் விமலதர்மசூரியன் , செனரத், II ஆம் இராஜசிங்கன் ஆகிய அரசர்கள் போர்த்துக்கேயருக்கு எதிராக யுத்த நடவடிக்கைகளை மேற்கொண்டமை.

**தந்துரேப் போர் - 1594**

- இக்கால மலையக அரசன் முதலாம் விமலதர்மசூரியன் போர்த்துக்கேய கப்பித்தான் ஜெனரலான பேரோ லோபேஸ் டீ சூசாவின் படையை பின்வாங்கிச் சென்ற போது தந்துரே எனும் இடத்தில் வைத்து தாக்கி சூசா உட்பட போர்த்துக்கேய இராணுவத்தினர் கொலை செய்யப்பட்டனர். இது கீழைத்தேசத்தில் போர்த்துக்கேயர் அடைந்த பாரிய தோல்வியாகும்.

**பலனப் போர் - 1603**

- 1603 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் போர்த்துக்கேய கப்பித்தான் ஜெனரல் தொன் ஜெரணிமேத அசவேது , சீமன் பிஞ்சோ, சமரகோன் முதலி ஆகியோரின் தலைமையில் தாக்குதல் மேற்கொள்ளப்பட்டது. போர்த்துக்கேயரிடம் இருந்த கரை நாட்டு சிங்களப் படை மலையகப் படைகளுடன் ஒன்றிணைந்து போர்த்துக்கேயரை எதிர்த்து தாக்கியதனால் போர்த்துக்கேயர் பலன கோட்டையை கைவிட்டுச் செல்ல நேர்ந்தது.

**ரன்தெனிவல போர் - 1630**

- செனரத் மன்னனின் காலத்தில் கொன்ஸ்தாந்தினு டீ சா தலைமையில் ஆக்கிரமிப்பு இடம்பெற்றது. போர்த்துக்கேயர் படையில் இருந்த லஸ்கரிஞ் படையணியும் சிங்களப் பிரதானிகள் சிலரும் மலையக அரசனுடன் இணைந்து கொண்டமை, மற்றும் கடுமையாகப் பெய்த மழையினால் போர்த்துக்கேய படை பலவீனமடைந்தமை போன்ற காரணிகளால் ரன்தெனிவல எனும் இடத்தில் இரண்டு நாட்களாக இடம்பெற்ற போரில் கொன்ஸ் தாந்தினு த சா மரணமடைந்து போர்த்துக்கேயர் தோல்வி அடைந்தனர்.

**கன்னொறுவ போர் - 1638**

- இரண்டாம் இராஜசிங்கன் காலத்தில் போர்த்துக்கேய கப்பித்தான் ஜெனரலான தியோகுத மேலோ த கஸ்ரோ தலைமையில் 1638 மார்ச் மாதத்தில் இப்போர் இடம் பெற்றது.செங்கடகலையை விட்டு விட்டு கன்னொருவயில் பாதுகாப்பு அரண் அமைத்த இரண்டாம் இராஜசிங்கன் போர்த்துக்கேய படையை முற்றுகையிட்டு அனைவரையும் கொலை செய்தான்.

- இச் சண்டைகளில் போர்த்துக்கேயருக்கு அறிமுகமில்லாத கொரில்லா தாக்குதல் முறையை மேற்கொண்டமை மற்றும் மலையகத்தின் இயற்கை அரண்களை மலையக படையினர் முறையாகப் பயன்படுத்திக் கொண்டமை.

- லஸ்கிரிஞ் படையணி மலையக படையணியுடன் இணைந்து கொண்டமை.

- கரையோரப் பகுதிகளில் போர்த்துக்கேயருக்கு எதிராகச் செயற்பட்ட நிகம்பிட்டியே பண்டாரவுக்கு உதவி வழங்கியமை.

- ஒப்பந்தங்களை மேற்கொண்டமை
  1617 கப்பித்தான் நுனே அல்வாரேஸ் பெரேரா உடன் செனரத் மன்னன் செய்த ஒப்பந்தம்.

  1633 கப்பித்தான் நுனே அல்வாரேஸ் பெரேரா உடன் செனரத் செய்த ஒப்பந்தம் - மலையகத்தின் சட்டப்படியான அரசன் செனரத் எனவும் கரையோரப் பகுதியின் நிருவாகம் போர்த்துக்கேயர் வசமானது எனவும் ஏற்றுக் கொண்டமை.

**(10 புள்ளிகள்)**

**07) கோல்புறூக் - கமரன் குழுவினர் முன்வைத்த அரசியலமைப்பு, நிருவாகச் சீர்திருத்தங்கள் ஆகியவற்றின் முக்கியத்துவத்தை பரிசீலனை செய்க.**

**அரசியலமைப்பு முன்மொழிவுகள்**

- சட்டவாக்க சபை ( உத்தியோக பற்றுள்ளோர் - 9 , உத்தியோக பற்றற்றோர் - 6 ) சட்ட நிருவாக சபை (ஆலோசனை சபையாக செயற்பட) அமைக்கப்பட்டமை.
- வரையறுக்கப்பட்டளவு பொதுமக்கள் கருத்தைக் கணிப்பதற்கு சந்தர்ப்பம் வழங்கப் பட்டது.
- எதிர்கால பாராளுமன்ற முறையின் ஆரம்பக் கட்டமாக இச் சட்டவாக்க சபை அமைந்திருந்தது.
- ஆளுநரின் அதிகாரத்தை வரையறுத்தல்.
- சட்டவாக்க சபையின் மூலமும், பொதுமக்கள் முறைப்பாடுகள் மூலமும் குடியேற்றங்களின் தகவல்களைப் பெற்றுக் கொள்ள முடிந்தமை.

**நிருவாக முன்மொழிவுகள்**

- இதுவரை வெவ்வேறாக நிர்வாகம் செய்யப்பட்ட கரையோரப் பகுதிகளும் மலையகப் பகுதிகளும் ஒன்றிணைக்கப்பட்டு முழு நாடும் 5 மாகாணங்களாக பிரிக்கப்பட்டன. அவற்றுக்குப் பொறுப்பாக அரசாங்க அதிகாரிகள் (ஏஜன்ட்) மாவட்டங்களுக்கு பதில் அரசாங்க அதிகாரிகளும் நியமிக்கப்பட்டனர்.

**சிவில் சேவையில் மேற்கொள்ளப்பட்ட மாற்றம் முக்கியமானதாகும்.**

- சில பதவிகள் இரத்துச் செய்யப் பட்டன.
- சில பதவிகள் ஒன்றிணைக்கப்பட்டன.
- சம்பளத்தை குறைத்து ஓய்வூதியத்தை இரத்துச் செய்தனர்.
- சிவில் சேவையாளஉகளுக்கு தனிப்பட்ட முயற்சிகளில் ஈடுபட விதிக்கப் பட்டிருந்த தடைகள் நீக்கப்பட்டது.
- இதன் விளைவாக சிவில் சேவையாளர்கள் பெருந்தோட்ட பயிர்ச் செய்கையில் ஈடுபடலாயினர்.
- பொது மக்களுக்கும் அதிகாரிகளுக்கும் இடையில் இடைவெளி ஏற்படலானது.
- தமது அதிகாரத்தைப் பயன்படுத்தி பெருந்தோட்ட பயிர்ச் செய்கையின் முன்னேற்றதிற்கு தேவையான சட்டதிட்டங்களை ஏற்படுத்தியமையால் சுதேசிகள் பாதிக்கப் பட்டனர்.

**நீதித் துறை முன்மொழிவுகள்**

- கமரனின் நீதித்துறை சாஉபான முன்மொழிவுகள் பயன்பாட்டு வாதத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது.

- ஒன்றிணைந்த நீதித்துறை கட்டமைப்பை ஏற்படுத்தியமை.
  - ஐரோப்பியருக்கும் சுதேசிகளுக்கும் என வெவ்வேறாக நிலவிய நீதி முறையினை நீக்கியமை.

- சட்டத்தின் முன் அனைவரும் சமன் எனும் அடிப்படை வாத கொள்கையை நடைமுறைப்படுத்தியமை.

- ஆளுநரிடம் இருந்த நீதித்துறை அதிகாரத்தை இரத்துச் செய்து சுயாதீன நீதித்துறை கட்டமைப்பை ஏற்படுத்தியமை.

- பிரதான நகரங்களில் மாவட்ட நீதிமன்றம் நிறுவியமை.இவற்றில் சிவில் மற்றும் வரையறுக்கப்பட்ட குற்றவியல் வழக்குகள் விசாரணை செய்யும் அதிகாரம் வழங்கப்பட்டிருந்தன.

- முழு நாட்டிற்கும் பொருந்தும் வகையில் உச்ச நீதி மன்றத்தின் நீதித்துறை அதிகாரத்தை பரவலாக்கியமை.

- ஆங்கிலேய மாவட்ட நீதிபதிகள் சுதேச சமூக கலாசார பாரம்பரியங்கள் பற்றி அறிந்திருக்காததனால் அவர்களுக்கு உதவியாக சுதேச உதவி வழக்கறிஞர்கள் நியமிக்கப்பட்டனர்.

- பாரம்பரிய கம்சபா (கிராம சபை) நீதிமன்ற முறையின் முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தாலும் கமரனின் நீதித்துறை சீர்த்திருத்தத்தால் அது உள்வாங்கப்படவில்லை.

**(14 புள்ளிகள்)**

**08) பின்வரும் தலைப்புகளில் 1948 தொடக்கம் 1978 வரையான காலப்பகுதியில் இலங்கையில் ஏற்பட்ட பொருளாதார அபிவிருத்தி தொடர்பாக பரிசீலனை செய்க?**

**i. நெற் பயிர்செய்கையும் விவசாயக் குடியேற்றங்கள்.**

**ii. தேசிய மயமாக்கல் திட்டம்.**

**iii. கைத்தொழில்கள்.**

(i) **நெற் பயிர்செய்கையும் விவசாயக் குடியேற்றங்கள்**

- சுதந்திரத்தின் பின் ஆட்சிக்கு வந்த சகல அரசாங்கங்களும் நாட்டை தன்னிறைவடையச் செய்யும் வகையில் நெற்செய்கை விருத்தியில் கவனம் செலுத்தினர்.

- இதற்காக பயிர்ச் செய்கை நிலங்களை அதிகரித்தல், விளைச்சலை அதிகரித்தல் என்பவற்றுக்கு நடவடிக்கைகளை மேற்கொண்டனர்.

- நெற்செய்கையை அதிகரிக்கும் நோக்கில் கிராமியக் குளங்களை புனரமைத்து விவசாயக் குடியேற்றங்களை நிறுவினர்.

- விளைச்சலை அதிகரிக்க நவீன நுட்ப முறைகளைக் கையாண்டமை. புதிய உபகரணங்களைப் பயன்படுத்தினர். (உழவு இயந்திரம்)

- மகாஇலுப்பலகம, அனுராதபுரம், பத்தலகொட, புளியங்குளம், கன்னொருவ முதலிய ஆராய்ச்சி நிலையங்களை நிறுவியமை.

- கட்டுப்பாட்டு விலை, உர மானியம், பயிர் காப்புறுதி, விவசாயக் கடன் ஏற்படுத்தப்பட்டமை.

- விவசாயிகளுக்குப் பொருத்தமான சட்டதிட்டங்கள் கொண்டு வரப்பட்டமை.

1958 வயல் சட்டம் – விவசாயிகளின் இடம் தொடர்பான பிரச்சினைகளுக்கு தீர்வாக அமைந்தது.

- சுதந்திரம் அடைந்த போது பேணி வந்த கொள்கைத் திட்டங்களை தொடர்ந்தும் பேணியமை:
  உதாரணம் (விவசாய குடியேற்ற திட்டங்கள் , கல்ஓயா , ஹுருளுவாவி)

- நடைமுறையில் காணப்படுகின்ற விவசாய குடியேற்ற திட்டம் 1933 மின்னேரி திட்டத்துடன் ஆரம்பமானது. டீ.எஸ். சேனாநாயக்க இதன் முன்னோடியாவார்.

- 1933 கலாவாவி, நாச்சதூவ வாவி ஆகிய குளங்களை அண்டி விவசாயக் குடியேற்றத் திட்டம் இடம்பெற்றது.

- விவசாய குடியேற்றத் திட்டத்தின் பிரதான நோக்கம்
  - சன நெருக்கடியான பகுதிகளில் இருந்து சன நெருக்கடி குறைந்த பகுதிகளுக்கு மக்களை குடியமர்த்தல்.
  - இதற்காக காணிகள் இல்லாத நபர்களை தெரிவு செய்து அவர்களுக்கு காணிகளை வழங்கி விவசாயத்தை ஊக்குவித்தல்.
  - நாட்டின் நெற்செய்கையை விருத்தி செய்து அரிசி இறக்குமதிக்கு ஏற்படும் செலவைக் குறைத்தல்.

- இஸ்ரேல், இந்தியா, லிபியா முதலிய நாடுகளின் விவசாய குடியேற்றத் திட்ட அனுபவங்கள் இங்கும் கையாண்டமை.
  - விவசாயிகளுக்கு வீடு கட்டுவதற்கு தேவையான நிதி உதவி வழங்கி 1939 இன் பின்னர் விவசாயிகள் கட்டப்பட்ட வீடுகளில் குடியமர்த்தப்பட்டனர்.
  - முதலில் நெற்செய்கைக்கு 5 ஏக்கரும் வீட்டுத் தோட்ட செய்கைக்கு 3 ஏக்கர் நிலமும் வழங்கப்பட்டது.
  - அரசாங்கத்தின் செலவில் நிலங்கள் விவசாயத்துக்கு ஏற்றால் போல் பண்படுத்தப்பட்டு வழங்கப்பட்டது.
  - இவ்வாறு வழங்கப்பட்ட இடங்களை அடுத்தவருக்கு கையளிக்க முடியாது.
  - குடியேற்றங்களுக்கு தேவையான உட்கட்டமைப்பு வசதிகள் அரசாங்கத்தால் வழங்கப்பட்டது.
    (வீதி, பாடசாலை, மருத்துவ மனை, தபால், கூட்டுறவுக் கடை)

- மின்னேரியாவுடன் தொடங்கிய இத்திட்டம் உலர் வலயத்தில் படிப்படியாக வளர்ச்சியடைந்தது.

- சுதந்திரம் அடையும் போது மின்னேரியா, நாச்சதுவ, கலாவெவ, இரணைமடு, மினிப்பே, பெரகம, பராக்கிரம சமுத்திரம், ரிதிபெந்தி எல, எலகர ஆகிய குடியேற்றத் திட்டங்கள் அமைக்கப் பட்டிருந்தன.

- சுதந்திரத்தின் பின் ஆட்சிக்கு வந்த சகல அரசாங்கங்களும் புதிய குடியேற்றத் திட்டங்களை உருவாக்கினர். (கல்ஓயா, ஹுருளு வாவி, தேவஹுவ)

(ii) **தேசிய மயமாக்கல் திட்டம்.**

- தனியாரிடம் காணப்பட்ட சில துறைகளை அரசாங்கம் பொறுப்பேற்றது.
- 1956 ஆம் ஆண்டு ஆட்சிக்கு வந்த மக்கள் ஐக்கிய முன்னணி அரசாங்கத்தினால் இத்திட்டம் முன்னெடுக்கப் பட்டது.
- போக்குவரத்துடன் ஆரம்பமான இத்திட்டம், காப்புறுதி, துறைமுகம், மற்றும் வங்கித் துறை வரை பரவல் அடைந்தது.
- 1961 ஆம் ஆண்டு கனிய எண்ணெய் தேசிய மயப்படுத்தப்பட்டது. இதன் மூலம் வெளிநாட்டு கம்பனியின் ஏகாதிபத்தியத்திற்கு உட்பட்டிருந்த கனிய எண்ணெய் இறக்குமதி செய்தல், களஞ்சியப்படுத்தல், விநியோகித்தல் என்பன கனிய எண்ணெய் கூட்டுத்தாபனத்திடம் கையளிக்கப்பட்டது.
- 1972 – 1975 ஆம் ஆண்டுகளில் தோட்டங்கள் மக்கள் மயப்படுத்தப்பட்டன.
- வீட்டுரிமையை வரையறுத்ததுடன் மேலதிக வீடுகள் அரசினால் பொறுப்பேற்கப்பட்டன.
- நில உரிமையை வரையறை செய்து, அரசினால் பொறுப்பேற்கப்பட்ட நிலம் மக்களுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டன. மேலும் சில பகுதிகள் மக்கள் பெருந்தோட்ட அபிவிருத்தி சபைகளிடம் ஒப்படைக்கப்பட்டன.

(III)**கைத்தொழில்கள்**

- பிரித்தானியர் காலத்தில் இந்நாட்டில் கைத்தொழில்துறை பற்றி கவனிக்காமல் விட்டதற்கு பரிகாரமாக 1939 ஆம் ஆண்டு கைத்தொழில்துறை பற்றி கவனம் செலுத்தப்பட்டது. புடவை, பலகை, கடதாசி, பருத்தி, கோஸ்டிக் சோடா என்பன பரீட்சார்த்த திட்டமாக தொடங்கப்பட்டன.
- எவ்வாறாயினும் இவை நஷ்டத்தில் இயங்கியதனால் 1953 ஒட்டுப்பலகை, மட்பாண்ட கைத்தொழில் தவிர்ந்த ஏனையவை மூடப்பட்டன.
- சுதந்திரத்துக்கு பின்னர் அரசாங்கம் சீமெந்து தொழிற்சாலையை நிறுவியது.
- அநேகமான நாடுகள் சுதந்திரம் அடைந்த பின்னர் ஏற்றுமதி கைத்தொழில் துறைகளில் கவனம் செலுத்தினாலும் இலங்கையில் அவ்வாறன நிலை காணப்படவில்லை.
- 1956 ஆம் ஆண்டு வரை கைத்தொழிற்சாலைகளை தனியாரிடமும் வழங்கி இருந்தது.
- ஸ்ரீ மாவோ பண்டாரநாயக்கவின் காலத்தில் ஏற்றுமதியை ஊக்குவிக்கும் கைத்தொழில்களின் பக்கம் கவனம் செலுத்தினர்.
- 1958 ஆம் ஆண்டு முதல் சமவுடமை சார்ந்த நாடுகளிடமிருந்து கைத்தொழில் அபிவிருத்திக்கான உதவிகள் கிடைத்தன. சீனி, புடைவை, இரும்பு, உருக்கு

- 1961 ஆம் ஆண்டு உள்நாட்டு, வெளிநாட்டு முதலீட்டாளர்களுக்கு கைத்தொழிலை ஊக்குவிக்க பல்வேறு ஊக்குவிப்புகள் மேற்கொள்ளப்பட்டன.

**(14 புள்ளிகள்)**

**09) பின்வரும் எவையேனும் இரண்டினது வரலாற்று முக்கியத்துவம் பற்றி சிறுகுறிப்பு எழுதுக.**

(i) **கரையோர மாகாணங்களில் ஒல்லாந்தரின் நிர்வாக முறை**

- 1658 – 1796 வரை இலங்கையின் கரையோரப் பகுதிகளை ஒல்லாந்தர் நிர்வாகம் செய்தனர். (VOC – ஒல்லாந்த கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனி)

- அவர்களின் பிரதான நோக்கங்களாக வர்த்தகத்தை மேற்கொள்ளல், சமயத்தை பரப்புதல் மற்றும் அரசியல் அதிகாரத்தை ஏற்படுத்துதல் என்பனவாக அமைந்தன.

**மத்திய நிர்வாகம்**

- இலங்கையின் கரையோர நிர்வாகம் பத்தேவியாவின் ஆளுநரால் நியமிக்கப்பட்ட ஆளுநராலும் அவருக்கு உதவியாக இருந்த ஆலோசனை குழுவாலும் ( பொலிடிக் ராத் ) மேற்கொள்ளப்பட்டது. இவர்களுக்கு முழுமையான அதிகாரம் வழங்கப் பட்டிருந்தது.

- அரசியல், வர்த்தகம், இராணுவம் என மூன்று பிரிவுகளின் கீழ் நிர்வாகம் மேற்கொள்ளப்பட்டன.

**பிராந்திய நிர்வாகம்**

- போர்த்துக்கேயரைப் போன்றே ஒல்லாந்தரும் இலங்கையில் நடைமுறையில் இருந்த பண்டைய நிர்வாக முறைகளை அவ்வாறே பேணி வந்தனர்.

- இவர்கள் பிராந்தியங்களை கொமாண்டரிகளாக பிரித்திருந்தனர். ( கொழும்பு, காலி, யாழ்ப்பாணம் ) கொழும்பு கொமாண்டரி ஆளுனராலும் ஏனையவை கொமாண்டர்களின் கீழும் நிர்வாகம் செய்யப்பட்டு வந்தது.

- கொமாண்டரிகளினுள் பண்டைய நிர்வாக கட்டமைப்பையும், பதவி நிலைகளையும் நடைமுறைப் படுத்தி வந்தனர்.

- உயர் பதவிகளுக்கு ஒல்லாந்தர்களையே நியமித்தனர். (திசாவை, ரட்ட)

- உள்நாட்டு வரி சேகரிப்பு முறை, இராஜகாரிய முறை, நில உடமை முறை என்பவற்றை தமது நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ள பயன்படுத்தினர்.

- புதிய நீதிமன்ற முறையை அறிமுகம் செய்தனர். மூராத் வான் ஜஸ்டிஸ் – உயர் நீதிமன்றம், லேண்ட் ராத் – நிலம் தொடர்பான நீதிமன்றம், சிவில் ராத் – சிவில் நீதிமன்றம்

**(8 புள்ளிகள்)**

(ii) **1848 பிரித்தானியருக்கு எதிரான கிளர்ச்சி**

- 1848 ஆம் ஆண்டு இடம்பெற்ற கிளஉச்சி பிரித்தானிய நிர்வாகத்துக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட இறுதி ஆயுதப் போராட்டமாகும், இப்போராட்டம் மாத்தளை, குருநாகல் பகுதிகளில் தொடங்கி பின்னர் ஏனைய பகுதிகளுக்கும் பரவியது. இக்கிளர்ச்சிக்கு ஏதுவாக பல காரணிகள் இருந்தன.

- நீண்ட கால காரணிகள்

**கோல்புறூக் - கமரன் சீர்திருத்ததின் தாக்கம்**

- மலையகம் கரையோர பிரதேசங்கள் இணைக்கப்பட்டமையால் மலையக பாரம்பரியங்கள் பாதிக்கப்பட்டன.

- சிவில் சேவையாளர்கள் பெருந்தோட்ட துறையில் முதலீடு செய்யத் தொடங்கியமையால் நிர்வாகம் பலவீனமடைந்தது.

- இராஜகாரிய முறை நீக்கப்பட்டதால் பாரம்பரிய நில உடமைகளில் மாற்றம் ஏற்பட்டது.

- கிராம சபை செயலிழக்கப்பட்டதால் கிராமிய மக்கள் அதிக இன்னல்களை எதிர் நோக்கினர்.

- புதிய நீதிமன்ற முறை அதிக செலவினையும் சிக்கல் தன்மையையும் கொண்டிருந்ததால் மக்கள் பெரிதும் துன்பப்பட்டனர்.

- உள்நாட்டு விவசாயம் பற்றி கவனம் செலுத்தாமை.

- பெருந்தோட்ட துறையின் தாக்கம்

- பெருந்தோட்டப் பயிர்ச்செய்கைக்கு பிரித்தானியர் அதிகம் ஆர்வம் காட்டியமை.

- ஐரோப்பிய பெருந்தோட்ட முதலீட்டாளர்கள், கரையோர வியாபாரிகள், தென் இந்திய தொழிலாளர்கள் முதலியோர் மலையக பகுதிகளுக்கு இடம்பெயர்ந்தமையால் மலையக மக்கள் வாழ்வில் பாரிய தாக்கத்தை ஏற்படுத்தியது.

- 1840 (12) ஆம் இலக்க தரிசு நிலச் சட்டத்தால் விவசாயிகள் தமது நிலங்களை இழந்தமை.
  (Prevention of Encroachments upon Crown Lands Ordinance)

- பெருந்தோட்ட பயிஉச்செய்கைக்கு காடுகளை அழித்தமையால் மலையகத்தில் பாரிய சூழல் மாசடைவை ஏற்படுத்தியமை.

- மலைநாட்டில் மதுபானக் கடைகள் திறக்கப் பட்டதால் சமூக சீர்கேடுகள் அதிகரித்தமை.

**அண்மித்த காரணி / உடனடிக் காரணி**

- தமது வருமானத்தை அதிகரிக்கும் வகையில் பிரித்தானியர் புதிய வரிகளை விதித்தனர்.
- டொரிங்டனின் புதிய வரிகள்
- கடை வரி, மாட்டு வண்டி வரி, துறைமுக வரி, துப்பாக்கி வரி, ஆள் வரி, முத்திரை வரி, நாய் வரி
- அரசுக்கும் சமயத்துக்கும் இடையில் நிலவி வந்த பாரம்பரிய தொடர்பில் மாற்றம் ஏற்பட்டமை.
- பிரித்தானியர் இதுவரை பின்பற்றி வந்த கொள்கையை மாற்றி புனித தந்த தாதுவின் பாதுகாப்பை பிக்குகளிடமும் தியவடன நிலமே இடமும் கையளித்தமை.
- நீலப் புத்தகத்திற்கு தேவையான தகவல்களை சேகரித்ததை மக்கள் தவறாக விளங்கியமை.
- கொழும்பில் கிறிஸ்தோப்பர் எலியட்டின் தலைமையில் எதிர்ப்பு உண்டானது. விஷேடமாக சொத்து ( இஸ்தோப்பு ) வரிக்கு எதிராகவும் அவரிடம் காணப்பட்ட லிபரல் ( தாராண்மை ) வாத சிந்தனையின் விளைவாகவும் இது மேற்கொள்ளப்பட்டது.
- கண்டியில் துப்பாக்கி வரிக்கு எதிராக விவசாயிகள் ஒன்று கூடிய போது ஏற்பட்ட அமைதியின்மை ஆயுத மோதலாக மாறியது.
- புரன் அப்பு, கொங்காலேகொட பண்டா, தலைவர்களும் குடாபொல பிக்கு போன்ற மத குருக்களும் தலைமை தாங்கினர்.
- யுத்த கால சட்டத்தை பிரயோகித்து அரசாங்கம் கிளர்ச்சியை கட்டுப்படுத்தியது.
- பிரித்தானிய அரசாங்கத்தால் நியமித்த ஆணைக்குழு, புதிதாக விதிக்கப்பட்ட சில வரிகளை இரத்துச் செய்ததுடன் டொரிங்டன் ஆளுநரையும், குடியேற்ற நாட்டு செயலாளர் எமர்சன்ட் ரெனட்டையும் பிரித்தானியாவுக்கு திருப்பி அனுப்பியது.

**(8 புள்ளிகள்)**

(iii) **பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் அரைப்பகுதியில் ஏற்பட்ட இந்து இஸ்லாமிய கலாசார மறுமலர்ச்சி.**

- கத்தோலிக்க மிசனரிகளாலும் பிரித்தானிய அரசாங்கத்தாலும் பாதிக்கப்பட்ட பௌத்த, இந்து, இஸ்லாமிய சமயத்தவர்கள் தமது சமயத்தை பாதுகாத்துக் கொள்ள மேற்கொண்ட பதில் நடவடிக்கையாகவே இச் சமய மறுமலர்ச்சி ஏற்பட்டது.

**இந்து சமய மறுமலர்ச்சி**

- ஆறுமுக நாவலர் முன்னோடியாக செயற்பட்டார்.
- இவர் 1872 இல் சைவ பிரகாச வித்தியாசாலையை நிறுவி இந்துசமய பிள்ளைகளுக்கு ஆங்கிலக் கல்வியை வழங்கினார்.
- சைவ சமய மாணவர்கள் தமிழ், சமஸ்கிருதம் போன்ற மொழிகளைக் கற்பதற்கு ஆர்வம் காட்டினார்.
- வண்ணார் பண்ணையில் அச்சகம் ஒன்றை நிறுவி இந்துசமய புத்தகங்களையும், துண்டுப் பிரசுரங்களையும் அச்சிட்டு வெளியிட்டார்.
- பண்டைய சைவ சமய நூல்களை மீள் பதிப்புச் செய்தல், புதிய நூல்களை உருவாக்குதல், பைபிளை தமிழுக்கு மொழி மாற்றம் செய்தல் போன்றவற்றை மேற்கொண்டார்.

**இஸ்லாமிய சமய மறுமலர்ச்சி**

- M.C. சித்திலெப்பை முன்னோடியாவார்.
- இஸ்லாமிய கல்வியை முன்னேற்றம் அடையச் செய்தார் – 1884 சாஹிரா கல்லூரி, 1893 கண்டி முஸ்லிம் மகளிர் கல்லூரிகளை நிறுவினார்.
- ஆங்கிலம், அரபு ஆகிய மொழிகளைக் கற்பதற்கு ஊக்கமளித்தார். மத்ரசா பாடசாலை முறையை ஆரம்பித்தார்.
- “முஸ்லிம் நேசன்” பத்திரிகையை தொடங்கினால்.
- Ceylon Islam Review சஞ்சிகைக்கு கல்வியின் முக்கியத்துவம் பற்றி குறிப்பிட்டு கட்டுரைகளை வரைந்தார்.
- ஓராபி பாஷாவினாலும் இஸ்லாமிய சமய மறுமலஉச்சிக்கு பாரிய பங்களிப்பு கிடைத்தது.

**(8 புள்ளிகள்)**

(vi)**டொனமூர் அரசியலமைப்பு**

- 1924 ஆம் ஆண்டு மனிங் டெவன்ஷயர் அரசியல் திட்டத்தில் காணப்பட்ட குறைபாடுகளை ஆராய்ந்து அறிக்கை மற்றும் ஆலோசனை சமர்ப்பிப்பதற்கு 1927 ஆம் ஆண்டு டொனமூர் ஆணைக்குழு இலங்கைக்கு வந்தது. இவ்வாணைக்குழுவின் ஆலோசனையின் கீழ் பின்னர் நடைமுறைப்படுத்தப்பட்ட அரசியல் திட்டமே டொனமூர் அரசியல் அமைப்பாகும். இதில் பின்வரும் விஷேட பண்புகள் காணப்பட்டன.

**சர்வசன வாக்குரிமை**

- இதுவரை காலமும் வாக்குரிமையானது வரையறுக்கப்பட்டதாகவே இருந்தது. சனத்தொகையில் 4 வீதத்தினரே வாக்குரிமையைப் பெற்றனர். இவ்வாணைக்குழுவின் ஆலோசனையை A.E. குணசிங்க மாத்திரமே ஆதரித்தார். ஏனைய பலரும் எதிர்த்தாலும் பின்னர் அது நிறைவேற்றப்பட்டது. ஐரோப்பிய குடியேற்றங்களில் இலங்கைக்கே வாக்குரிமை முதலில் கிடைத்தது.

- இம்முறையின் கீழ் இனவாத பிரதிநிதித்துவம் நீக்கப்பட்டது.

- 21 வயதுக்கு மேற்பட்ட சகலருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது. முதலில் 30 வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கும், 21 வயதுக்கு மேற்பட்ட ஆண்களுக்கும் வாக்குரிமை வழங்க தீர்மானிக்கப்பட்டாலும் பின்னர் 21 வயதுக்கு மேற்பட்ட சகலருக்கும் வாக்குரிமை வழங்கப்பட்டது.

**ஆளுநர்**

- ஆளுநரின் அதிகாரம் வரையறுக்கப்பட்டது. தான் எடுக்கும் முடிவுகள் அனைத்தும் பற்றி குடியேற்ற நாட்டுச் செயலாளருக்கு அறிக்கை சமர்ப்பித்தல் வேண்டும்.

- சட்டவாக்க கழகத்தால் / (அமைச்சரவையால்) (நிர்வாகக் குழுவால்) எடுக்கப்படும் அவசரமான அல்லது பக்கச்சார்பான தீர்மானங்களை தடை செய்வதே ஆளுநரின் பிரதான பணியாகும்.

- ஆளுநரின் அதிகாரங்கள்:

- அரசுக் கழகத்தில் உரை நிகழ்த்துதல்.

- அரசுக் கழகத்தால் நிறைவேற்றப்படும் சட்டதிட்டங்கள் பற்றி பின்வரும் நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.
  - ஏக மனதாக ஏற்றுக்கொள்ளல்.
  - அரசனின் அனுமதி வரும் வரை பிற்போடல்.
  - திருத்தங்களுடன் / திருத்தங்கள் இன்றி மீண்டும் கவனம் செலுத்துமாறு அரசுக் கழகத்திற்கு திருப்பி அனுப்புதல்.
  - முக்கியமான சட்டதிட்டங்களாக இருந்தால் அதை அனுமதித்து பின்னர் அதை அரசுக்கழக உறுப்பினர்களுள் நபர்களின் ஆதரவுடன் சட்டமாக்கிக் கொள்ளல்.
  - ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு விடையத்தை 6 மாதங்களுக்கு நடைமுறைப்படுத்தாது பிற்போடல்.
  - முழுமையாக நிராகரித்தல்.

- அவசர நிலைகளின் போது அல்லது அவ்வாறான ஒரு சூழ்நிலை ஏற்படக்கூடும் என கருதும் போது எந்தவொரு திணைக்களத்தையும் தமது பொறுப்பில் ஏற்க முடியும்.

- அரச அதிகாரிகளை நியமித்தல், இடமாற்றம் செய்தல், நீக்குதல், ஒழுக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளல்.

**அரசுக் கழகம்**

- இதுவரை காலமும் இருந்த சட்டவாக்க, மற்றும் சட்ட நிருவாக கழகங்களிற்கு பதிலாக உருவாக்கப்பட்ட அரசுக் கழகத்தில் 61 நபர்கள் அங்கம் வகித்தனர்.

- பிரதேசவாரி பிரதிநிதித்துவம் மூலம் 50 நபர்களும், சிறுபான்மை நலன் கருதி நியமனம் மூலம் 8 நபர்களும், மூன்று காரியதரிசிகளையும் (நீதி, நிதி, நிர்வாகம்) கொண்டதாக அமைந்திருந்தது.

- பிரித்தானிய பொதுமக்கள் பிரதிநிதிகள் சபையைப் போன்று இதன் செயற்பாடு அமைந்திருந்தது.

- அரசுக் கழகத்தின் தீர்மானங்கள் நிர்வாகக் குழுக்கள் மூலம் நடைமுறைப்படுத்தப்பட்டது.

**நிர்வாகக் குழு மற்றும் அமைச்சரவை**

- ஏழு நிர்வாக குழுக்களைக் கொண்டிருந்தது.
  1. உள்நாட்டு அலுவல்கள்
  2. விவசாயம்
  3. உள்ளூராட்சி
  4. சுகாதாரம்
  5. கைத்தொழில் வடித்தகம்
  6. கல்வி
  7. போக்குவரத்தும் தொடர்பாடலும் பொது வேலைகளும்

- ஒவ்வொரு நிர்வாகக் குழுவும் 7 பேருக்குக் குறையாமலும் 8 நபர்களுக்கு மேற்பட்டாலும் உருவாக்கப்பட்டது.

- அமைச்சரவை இவ்வேழு நிர்வாகக் குழுக்களின் தலைவர்களையும் மூன்று காரியதரிசிகளையும் கொண்டு அமைக்கப்பட்டது.

**(8 புள்ளிகள்)**